# கல்கி

குடும்பத்துடன் படிக்க...

KALKI
7.10.2007 ரூ.8.00
80 பக்கங்கள்



## கலைஞரோடு ஐக்கியமாகி விட்டேனா?

# இரட்டைக் குழல் துப்பாக்கி!

உலகின் அதிகபட்ச வளையல்களின் அணி வகுப்பில்...

## பிரம்மாண்டமான வளையல் திருவிழா

# இன்றைய மார்க்கெட் விலையில்

பழைய நகைகள் அனைத்திற்கும்

# புத்தம் புதிய டிசைன்களில் வளையல்களை

வாங்கி கொண்டாடுங்கள்






- நேர்மையான விலைக் கொள்கை.
- பழசுக்கு புதுசு
- அனைத்து பர்ச்சேஸ்க்கும் சிறப்பு சலுகைகள்

Shop online at

50 வருட
பாரம்பரியத்தின்
அடையாளம்



தி சென்னை சில்க்ஸ்

## ஜுவல்லரி மஹால்

இந்தியாவின் தன்னிகரற்ற தங்கமாளிகை

தி. நகர், சென்னை -17. போன் - 24330888

கடையுடன் விசாலமான கார் பார்க்கிங் / ஞாயிறு கடை உண்டு





# அன்புள்ள சமரசம் ஆசிரியருக்கு...

கல்கி ஆசிரியருக்கு அன்புடன் ஒரு திறந்த மடல் எழுதியிருக்கிறார் 'சமரசம்' இதழின் பொறுப்பாசிரியர் சிராஜுல் ஹஸன். வேறு ஓரிரு இஸ்லாமிய பத்திரிகைகளும் 09.09.07 கல்கி இதழ் தலையங்கத்தை விமர்சித்து எழுதியுள்ளன. பக்கம்பக்கமாக விமர்சனம் செய்ய அவர்கள் எடுத்துக் கொண்டுள்ள பிரயாசை, கல்கி பத்திரிகையை இஸ்லாமிய சகோதரர்கள் வெகுவாக மதிக்கிறார்கள் என்பதையும், ஆகவே கல்கி ஏதேனும் குறைகூறினால் அவர்களால் பொறுத்துக்கொள்ள முடியவில்லை என்பதையும் உணர்த்துகிறது. அதற்காக நன்றி, மகிழ்ச்சி.

தலையங்கத்துக்கு எதிரான இந்த விமர்சனங்களில் நான்கு முக்கிய விஷயங்கள் வலியுறுத்தப்படுகின்றன.

1. பயங்கரவாதம் என்பது மட்டுமே இருக்கிறது. இஸ்லாமிய பயங்கரவாதம் என்று குறிப்பிடுவதே தவறு. அப்படி ஏதும் கிடையாது.

2. இஸ்லாமியர்களுக்கு இந்த நாட்டில் சலுகை எதுவும் காட்டப்படவில்லை. இஸ்லாமியரில் பிற்படுத்தப்பட்டோரும் ஏழைகளும் ஏராளமாய் இருக்கிறார்கள்.

3. ஜிஹாதி பத்திரிகைகள் வெளியிடும் கருத்துக்களுக்கு இந்திய முஸ்லிம்கள் பொறுப்பு ஏற்க முடியாது.

4. பயங்கரவாதத்தைக் கண்டித்து இந்தியாவில் உள்ள இஸ்லாமிய அமைப்புகளின் தலைவர்கள் வெளியிடும் அறிக்கைகளை எந்தப் பத்திரிகையும் வெளியிடுவதில்லை (கல்கி உள்பட).

1. பயங்கரவாதம், அடிப்படைவாதம், தீவிரவாதம் என்று என்ன பெயரிட்டு அழைத்தாலும் சரி, அது இஸ்லாமில் மட்டுமல்ல, எல்லா மதங்களிலும் இன்று ஊடுருவியிருக்கிறது. அப்படிப்பட்டவர்கள் இல்லை என்று சொல்லிக் கொண்டிருப்பது நம்மை நாமே ஏமாற்றிக் கொள்வதாகும் என்று கல்கி கருதுகிறது. அலட்சியம் செய்து வன்மையான எதிர்ப்பு தெரிவிக்காமல் இருப்பது இந்நாட்டின் எதிர்கால அமைதிக்கும், மக்களின் நல்வாழ்வுக்கும் ஆபத்தாக முடியும். 'கருணாநிதியின் தலையைக் கொண்டு வா' என்று சொன்னாலும் சரி, ஸல்மான் ருஷ்டிக்கு மரண தண்டனை விதித்தாலும் சரி, அதை இந்துக்களும், முஸ்லிம்களும் கடுமையாகக் கண்டிக்க வேண்டும். குண்டு வைக்கும் கலாசாரம் குழிதோண்டிப் புதைக்கப்பட வேண்டும். இதில் அரசியல் மற்றும் மதத் தலைவர்களுக்கு முக்கிய பொறுப்பு உண்டு.

## ஆசிரியர் பக்கம்

2. இந்த நாட்டில் இஸ்லாமியரில் மட்டு மல்ல, எல்லா மதத்தினரிலும் பிற்படுத்தப்பட்டோரும், பரம ஏழைகளும் ஏராளமாக இருக்கிறார்கள். அவர்கள் வாழ்க்கைத் தரம் உயர வருவாய் அடிப்படையில் சலுகைகள் வழங்குவதே உசிதமானது. சாதி மத அடிப்படைகளில் சலுகைகள் வழங்குவது பிரிவினை உணர்வுகளையே வளர்க்கும். இஸ்லாமியர்களுக்கு சலுகைகள் ஏதும் காட்டப்படவில்லை எனில் உரிமைகள் வழங்கப்பட்டுள்ளன என்று சொல்லலாம். இந்த நாட்டை மதச்சார்பற்ற நாடாக சுமார் அறுபது ஆண்டுகளுக்கு முன் தீர்க்கதரிசனத்துடன் நமது பெருந்தலைவர்கள் அறிவித்ததே சிறுபான்மையினருக்கு உரிமைகள் வழங்குவதற்காகத்தான். இந்த உரிமைகள் இல்லை எனில் இதற்குள் பொது சிவில் சட்டம் அமலாகியிருக்கும்.

3. ஜிஹாதி பத்திரிகைகள் எழுதியதற்கு இந்திய முஸ்லிம்கள் பொறுப்பு ஏற்க வேண்டும் என்று கல்கி கூறவில்லை. அந்தக் கருத்துக்களை எதிர்த்துக் குரல் கொடுங்கள்; கண்டனம் செய்யுங்கள் என்றுதான் சொல்கிறது. அப்படிப்பட்ட பத்திரிகைகள் இருப்பதே தெரியாது என்ற வாதம் செல்லாது. அவை எழுதுவதை இங்குள்ள பத்திரிகைகள் மறுபிரசுரம் செய்தன. அதையாவது படித்துப் பாருங்கள்.

4. இஸ்லாமியத் தலைவர்கள் பயங்கர வாதத்தை எதிர்த்துக் குரல்கொடுப்பதை இந்தியப் பத்திரிகைகள் இருட்டடிப்பு செய்கின்றன என்ற வாதம் உண்மையாயின், இஸ்லாமியத் தலைவர்களின் பொறுப்பு பல மடங்காகிறது. அந்த இருட்டடிப்பையும் மீறி அவர்கள் குரல் ஓங்கி ஒலிக்குமாறு செய்ய வேண்டும் என்று கல்கி கருதுகிறது.

கடைசியாக ஒரு விஷயம். நமக்கு இஸ்லாமிய சகோதரர்களிடம் அன்பும் மதிப்பும் நிறையவே உண்டு. அதன் காரணமாகவே, அவர்கள் நலன் கருதியும் இந்நாட்டின் உயிர் நாடியான மதச்சார்பின்மை வலுப்பெற வேண்டும் என்ற எண்ணத்தாலும் தேசத்தின் எதிர்கால அமைதி, நலனை உத்தேசித்தும் அந்தத் தலையங்கம் எழுதப் பெற்றது. ஏற்பதும் ஏற்காததும் உங்கள் விருப்பம். ஆனால், கல்கி பத்திரிகையின் நோக்கத்துக்கு உள்நோக்கம் கற்பித்து மாசுபடுத்தாதீர்கள். ●




# கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர்: லக்ஷ்மி நடராஜன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர்: சீதா ரவி

தலைமை உதவி ஆசிரியர்: மு.மாறன்

ஆசிரியர் குழு: சா.ஜெயராஜ், ஆரணி யுவராஜ்

வடிவமைப்பு: எஸ்.ஸ்டீஃபன், எம்.மோகன், ச.கார்த்திகேயன்

தொலைபேசி: 2225 1522, 2225 0623, 2225 1324

தொலைநகல்: 044 - 2225 1021

மின்னஞ்சல் - ஆசிரியர் குழு: kalki@kalkiweekly.com

சந்தா பிரிவு: subscription@kalkiweekly.com

பிற தகவல்களுக்கு: info@kalkiweekly.com

கல்கி இன்டர்நெட் முகவரி: www.kalkionline.com

சந்தா விவரம் - உள்நாடு:
ஒரு வருடம் : ரூ. 440/-
ஆறு மாதம் : ரூ. 220/-
வெளிநாடு (விமானத்தபால்):
ஒரு வருடம் : 65 யு.எஸ்.டாலர்

**Bharathan Publications Private Limited,**
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

# ராமர் பாலம் விவகாரம்...

# உணர்வுகளோடு

**சே**து சமுத்திரத் திட்டம் தொடங்கினது முதலே பிரச்னை தான். லேட்டஸ்ட், ராமர் பற்றிய கருணாநிதியின் சர்ச்சை. இது பற்றி பொது மக்கள் என்ன நினைக்கிறார்கள். கேட்டோம்...



* ஜீவா தீனன்



* தேன்மொழி



* நிஷாஜெரூமின்



* சுந்தரமூர்த்தி

**ஜீவா தீனன்** *(அண்ணா நகர், சென்னை) :* பெரும்பான்மை மதத்தையும் அந்த மதத்தைச் சார்ந்தவர்கள் வழிபடும் தெய்வங்களையும் கேலி, கிண்டல் செய்வது கருணாநிதிக்குப் புதிதல்ல; ஜனநாயகத்தில் அனைவர் உணர்வுக்கும் மதிப்பளிக்க வேண்டும் என்ற அடிப்படை உணர்வு கூட அவரிடம் இல்லை.

**சுந்தரமூர்த்தி** *(புரசைவாக்கம், சென்னை) :* ஜனநாயகத்தில் கருத்துரிமை எல்லோருக்கும் உள்ளது. அந்த அடிப்படையில் கலைஞரும் கருத்துத் தெரிவித்துள்ளார். அதே சமயம், பெரும்பான்மையோர் மற்றும் வல்லுனர்களின் கருத்துக்கு மதிப்பளித்து சேதுக் கால்வாய் வெட்ட, ராமர் பாலத்தை இடிக்காமல் மாற்றுப் பாதையையும் அரசு யோசிக்க வேண்டுமே தவிர, முரண்டு பிடிக்கக் கூடாது.

**தேன்மொழி** *(அயனாவரம், சென்னை) :* நெடுஞ்சாலைகள் போடும்போது, கோயில்கள், மசூதிகள், தேவாலயங்கள், இடிக்கப்படுகின்றன அல்லது மாற்று இடங்கள் ஏற்பாடு செய்து தரப்படுகின்றன. தேச வளர்ச்சி என்ற அடிப்படையில், நாம் சேதுக் கால்வாய் திட்டத்தைப் பார்க்க வேண்டும். 30,000 மீட்டர் உள்ள ஆதம் பாலம் என்ற ராமர் பாலத்தில் 300 மீட்டரே இடிக்க வேண்டியது என்று அரசு சொல்கிறது. இதைப் பயன்படுத்தி அரசியலாக்குபவர்களை மக்கள் புரிந்து கொள்வார்கள்.

**வெஸ்லி** *(கீழ்ப்பாக்கம், சென்னை):* கடவுள் இருக்கிறார் என்று சொல்வதற்கு ஆத்திகர்களுக்கு உரிமை இருப்பதுபோல் இல்லை என்று சொல்ல நாத்திகர்களுக்கு உரிமை இருக்கிறது. கலைஞர் ஒரு நாடறிந்த நாத்திகர். அவர் கருத்தைச் சொல்ல அவருக்கு உரிமை உண்டு. உச்ச நீதிமன்றத்தில் பிரமாணப் பத்திரத்தை மத்திய அரசு திரும்பப் பெற்ற பிறகும் சர்ச்சையைத் தொடரு

# விளையாடாதீர்கள்!

## —பொது மக்கள் கருத்து

வது நாட்டு வளர்ச்சிக்கு நல்லதல்ல.

**நிஷாஜெயின்** *(புரசைவாக்கம், சென்னை)* : ராமர் ஒரு கற்பனைப் பாத்திரம்; அவர் என்ன பொறியாளரா என்றெல்லாம் கலைஞர் பேசியது தவிர்க்கப்பட்டிருக்கலாம். தஞ்சை பெரிய கோயிலைக் கட்டிய ராஜராஜனும், கல்லணை கட்டிய கரிகாலனையும் நாம் போற்றுகிறோம். அவர்கள் என்ன பொறியாளர்களா என்றால் சிலருக்குக் கோபம் வரும். எனவே, பாரம்பரியமாக வரும் நம்பிக்கைகளைச் சிதைக்காமல் இருந்தால் மக்களிடையே அமைதி தழைத்தோங்கும்.

**கோ.அய்யனார்** *(திருநெல்வேலி)* : ராமர் பாலம் என்பது, இந்து மத நம்பிக்கைகளின் அடையாளங்களில் ஒன்றாக விளங்கி வருகிறது. இந்து மத நம்பிக்கைகளில் ஆழ்ந்த பற்றும், அழியாத நம்பிக்கைகளும் கொண்டிருக்கும் பெரும்பான்மை மக்களின் உணர்வுகளுக்கு மதிப்பளித்து, ராமர் பாலம் சிதைக்கப்படாமல் மாற்றுப் பாதையில் திட்டம் நிறைவேற்றப்பட வேண்டும்.

**ஜி.ஹரிராஜ்** *(திருச்சி)* : உச்சநீதிமன்றத்தில் தாக்கல் செய்திருந்த மனுவில், ராமர் பாலம் குறித்து இந்து மத நம்பிக்கைகளுக்கு எதிராக இருந்த வாசகங்களை மத்திய அரசு வாபஸ் பெற்றுக்கொண்டதுபோல் கருணாநிதி வெளியிட்ட விமர்சனக் கருத்துகளை வாபஸ் பெறுவதே இப்பிரச்னைக்கு சுமுகத் தீர்வாகும். பி.ஜே.பி. உட்பட அனைத்து அரசியல் கட்சிப் பிரதிநிதிகளையும் கலந்தாலோசித்து, சேது கால்வாய்த் திட்டம் நிறைவேற்றிட விரைந்து செயல்படுவதே நல்ல*

**பிருந்தா முரளீதரன்** *(திருவையாறு)* : இந்துக்கள் என்றாலே, அவர்கள் பிராமணர்கள். பா.ஜ.க.வினர், ஆர்.எஸ்.எஸ்.காரர்கள் என்று அபத்தமான அபிப்பிராயம் கொண்டிருக்கிறார் கலைஞர். சந்தர்ப்பம் கிட்டும்போதெல்லாம் இந்து மதச் செயல்பாடுகளையும், இந்துக்களின் உணர்வுகளையும் சீண்டிப் பார்ப்பது சரியல்ல. அயோத்தியில் பாபர் மசூதி இடிக்கப்பட்டது மாபெரும் தவறு என்று இன்றைக்கும் பேசி வரும் கலைஞர், ராமர் பாலத்தைச் சிதைப்பதும் தவறு என்று உணர்ந்து பேசக்கூடிய உண்மை நிலைக்கு வர வேண்டும்.

**எஸ்.என்.விஜயசாரதி** *(ஸ்ரீரங்கம்)*: நான் ஒரு ஜோதிட ஆய்வாளன் என்கிற வகையில் இதைச் சொல்கிறேன்... கடந்த 1947-1948 சர்வஜித் வருடத்தில் மதக் கலவரத்தினால் சுமார் இரண்டு லட்சம் மக்கள் உயிர்ப்பலி ஆயினர். தற்போது 2007-





வெஸ்லி



ஸ்ரீகுமார்



ஹரிராஜ்

2008 சர்வஜித் வருடத்திலும் இந்தியாவில் அதுபோன்று மதக் கலவரம் உருவாகாத வண்ணம் பேசுவதும் செயல்படுவதும் இந்தியாவில் இருக்கும் அனைத்து அரசியல் கட்சி மற்றும் இந்து மதத் தலைவர்களின் கடமையாகும்.

**மோஹன்** *(புதுடெல்லி)* : சமீபத்தில் அவுட் லுக்கில் ஆர்க்கியலாஜிக்கல் சர்வே ஆஃப் இந்தியா கொடுத்திருக்கும் அபிடவிட்டில், ராமர் பாலம் என்பது இயற்கையாக உருவாக்கப்பட்டதா அல்லது ஒரு மனிதரால் கட்டப்பட்டதா என்பதை பற்றிய ஆராய்ச்சி இதுவரை எழவே இல்லை என்று குறிப்பிடப்பட்டுள்ளது. ஆக, ராமர் பாலத்தைப் பற்றி இன்னும் ஸ்டடியே செய்யப்படாத வேளையில் அதைப் பற்றிய சர்ச்சை மட்டும் எங்கிருந்து வந்தது? பல அறிவியல் வல்லுனர்களும் ராமர் பாலம் என்பது நிச்சயம் இயற்கையாகவே தோன்றிய ஒரு அமைப்பு அல்ல என்றே ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். இயற்கையில் உருவாக்கப்பட்ட ஒன்றல்ல என்றால், அது நிச்சயம் மனிதரால் உருவாக்கப்பட்ட ஒரு அமைப்பாகத்தானே இருக்க முடியும்? ஆன்மிகம் என்பது அறிவியலுக்கு அப்பாற்பட்டது. எத்தனையோ விஷயங்களை அறிவியலால் விளக்கிட முடியும். ஆனால், எல்லா விஷயங்களையுமே அறிவியலால் ஒரு போதும் விளக்கிட முடியாது.

**பாலசுப்ரமணியன்** *(உத்தரப்பிரதேசம்)*: தமிழ் நாட்டில் மிகப்பெரிய சுனாமி வந்த பொழுது சென்னை மெரினா தொடங்கி கடலூர், கன்னியாகுமரி, வேளாங்கன்னி என்று பல இடங்களில் அப்பாவி மக்கள் கடலுக்கு இரையானார்கள். ஆனால், ராமேஸ்வரத்தில் அப்படி எந்தவிதமான ஒரு அசம்பாவிதமும் நடைபெறாமல் போனது ராமர் பாலத்தினால்தான். ராமர் பாலத்தை அரசியல் கண்கொண்டு நிச்சயம் பார்க்கவே கூடாது.

**ஆர்.விஜகுமாரி** *(கன்னியாகுமரி)* : கடலில் காணும் மணல் திட்டுக்கள் எல்லாம் ராமர் பாலம் என்று சொல்வதைப் போன்று வேறு மடமை கிடையாது. இராமேஸ்வரத்தில் மட்டுமா மணல் திட்டுக்கள் உள்ளன? உலகில் பல பாகங்களில் நாற்பதுக்கும் அதிகமான மணல் திட்டுக்கள் காணப்படுவது இயற்கை செய்த விந்தை. சேது கால்வாய்த் திட்டம் இன்றைய, நேற்றைய கனவல்ல. வெள்ளையன் ஆண்ட காலத்திலேயே இந்தியர்கள் கண்ட கனவு. நிச்சயம் நிறைவேற வேண்டும். குறுக்கே யார் வந்தாலும் குழப்பம்தான்.

**ஸ்ரீகுமார்** *(நாகர்கோவில்)* : சேது போன்ற பெருந்திட்டங்களுக்கு மாற்றான திட்டங்களை முன் வைக்காமல் வெறும் எதிர்ப்பை மட்டும் முன் வைப்பது சரியல்ல. நம்பிக்கை அடிப்படையில் அறிவியல் கண்டுபிடிப்புகளை பார்ப்பதற்குப் பதில் அறிவியல்பூர்வமாக அணுகி நாட்டு நலன் பற்றிச் சிந்திப்பதே சரியாக இருக்கும். பொதுவாக அரசியல்வாதிகள் பொது மக்களின் உணர்வுகளோடு விளையாடாமல் இருப்பது நல்லது.

**- ஸ்ரீநி, திருநாவுக்கரசு, தாகூர், நளினி**



பிருந்தா



விஜகுமாரி



பாலசுப்ரமணியன்

As per BIS,
IS:2888-1983.



# உத்திரவாதமான மேனிப் பராமரிப்பு
# தலைமுறை தலைமுறையாக

50 ஆண்டுகளுக்கும் மேலாக, மேனிப் பராமரிப்பில் ஸின்த்தால் நம்பகமான சோப் என்று தொன்றுதொட்டு பெயர் பெற்றுள்ளது. ஸின்த்தால் சோப் மேனியின் எழிலை மேம்படுத்துகிறது. இதன் ஒப்பற்ற நறுமணம் நாள் முழுவதும் நீடித்து உங்களை புத்துணர்வுடன் வைக்கும். எனவே ஸின்த்தால் பல தலைமுறைகளாக விசுவாசமான வாடிக்கையாளர்களை உருவாக்கியதில் ஆச்சரியமில்லை.




**மேனிப் பராமரிப்பு என்றென்றும்**



களில் தற்கொலை சிந்தனை அதிகமாக இருக்க முடியுமா? விளக்கம் பெற சென்னை மலர் மருத்துவமனையின் மன நல மருத்துவர் டாக்டர் என்.ரங்கராஜனை அணுகினோம்.

''படிப்பு, வேலைவாய்ப்பு போன்ற தகுதிகள் இருந்தும் அவை ஆரோக்கிய மான சிந்தனை அளிப்பதாக இருக்க வேண்டுமே. ஆனால் நிஜம் அப்படி அல்ல. கல்லூரிகளில் ஏகப்பட்ட கட்டுப்பாடுகள். ஆணும் பெண்ணும் பேசினால்கூட தப்பு என்னுமளவுக் குப் பிற்போக்கான சிந்தனை. கல் லூரி ஆசிரியர்கள் யாருமே மாண வர்களிடம் வாழ்க்கையின் சவால் களையும், அவற்றை எதிர்கொள் வதையும் குறித்து விவாதிப்பது இல்லை.

பொதுவாக, வேலை தேடும் படலம்கூட சில உண்மைகளை உணர்த்தும். ஆனால், படிக்கும்

# தகுதியிருந்தும்

**அ**திர்ச்சியளிக்கிறது அந்தப் புள்ளி விவரம்... 'தமிழகத்தில் வருடத்துக்கு 50,000 தற்கொலை முயற்சிகள். அதில் சுமார் பத்தாயிரம் பேர் இறக்கின்றனர். பதி னைந்திலிருந்து முப்பது வயதுக்கு உட் பட்டவர்களே மிக அதிக அளவில் தற் கொலை செய்துகொள்கின்றனர். கேரளா, தேசிய அளவில் தற்கொலை செய்துகொள் பவர்களின் எண்ணிக்கையில் முன்னணி யில் உள்ளது.'

இதென்ன முரண்பாடு? கல்வியும், வேலைவாய்ப்பும் அதிகமாக உள்ள இடங்

போதே கேம்பஸ் இன்டர்வியூ, படிப்பை முடித்ததும் வேலை என்று நடக்கும்போது, வாழ்க்கையின் பல தன்மைகளை உணர் வதற்கு இளம் வயதினருக்கு வாய்ப்பில்லா மல் போகிறது. நிறைய சம்பளம், உடனடி யாக ஒரு சொந்த வீடு போன்றவை ஒரு புறமிருக்க, மிக அதிக நேரம் வேலை செய்யும் சூழலில் ஆரோக்கியமான உறவு களை வளர்த்துக்கொள்ளும் வாய்ப்பு கள் இருப்பதில்லை. சோதனை நேரத்தில் தனியாகிவிட்ட உணர்வு தோன்றும்போது தற்கொலைக்கு முயற்சி செய்கிறார்கள்.

இதோ ஓர் உதாரணம். இளம் கணவன், மனைவி இரண்டு பேருக்குமே அமெரிக்கா சென்று வேலை செய்ய வேண்டும் என்று ஆசை. அதற்கான தகுதிகள் இரண்டு

பேருக்குமே இருந்தன. ஆனால், இருவரும் ஒரு சேர விண்ணப்பித்தபோதும் அந்தப் பெண்ணுக்குத்தான் முதலில் விசா கிடைத்தது. தொடக்கத்திலேயே 'யாருக்கு முதலில் விசா கிடைத்தாலும் அவங்க முதலில் அமெரிக்கா போய்விடலாம்' என்று பேசிக் கொண்டிருந்தார்கள். ஆனாலும் தனக்கு மட்டும் விசா கிடைக்காததால் அந்த இளைஞன் அவமானமாக உணர்ந்தான். மனைவியிடம் எரிந்து விழுந்தான். அவள் அமெரிக்கா கிளம்புவதற்கு இரண்டு நாட்களுக்கு முன்பு தூக்க மாத்திரைகளை விழுங்கினான். ஒரு வழியாக மருத்துவமனையில் காப்பாற்றிவிட்டார்கள். 'எனக்கு வாழவே தகுதியில்லை' என்று என்னிடம் புலம்பினான்.

கணவன் - மனைவி இருவருமே வேலை

# தற்கொலை ஏன்?

செய்யும்போது, அதுவும் கால நேரம் பார்த்து உழைக்க முடியாத மென்பொருள் போன்ற துறைகளில் பலவித அந்தரங்கச் சிக்கல்கள். சிலருக்குக் குழந்தை பெற்றுக் கொண்டு அதை வளர்ப்பதில் சிக்கல்கள். வேறு சிலருக்குக் குழந்தை பிறப்பைத் தள்ளிப் போடுவதால் ஏற்படும் குற்ற உணர்ச்சி... தவிர, அதீத பாசம்கூட அபத்தமான முடிவை எடுக்க வைத்துவிடும்.

இதைச் சொல்லும்போதே எனக்கு ஓர் இளம்பெண் நினைவுக்கு வருகிறாள். பத்தாம் வகுப்புப் படிக்கும்போதே அவள் ஓர் இளைஞனைக் காதலித்தாள். பெண்ணின் அப்பா கோடீஸ்வரர். அரிவாளை எடுக்காமல் காதலுக்கு மரியாதை செய்ய நினைத்தார். அந்த இளைஞன் நன்கு படித்தவன். பேசும் விதத்தில் பேசி அவனை மாப்பிள்ள ஆக்கிக்கொண்டார். அதன் பிறகு அவர்கள் மண வாழ்வில் நிறைய சோதனைகள்.

கணவன் நேரம் கழித்து வீட்டுக்கு வந்தால் அதற்காகச் சண்டை. அரை மணிக்கு ஒரு முறை தொலைபேசியில் விசாரிப்பு. 'ஆபீஸ்ல பொண்ணுங்ககூட பேசுவியா?' என்பது போன்ற சந்தேகக் கேள்விகள். 'என்னால உன்னைப் பிரிந்து கொஞ்ச நேரம்கூட இருக்க முடியல' எனும் புலம்பல். தானும் அழுது தன் கணவனின் வாழ்க்கையையும் நரகம் ஆக்கினாள் அந்தப் பெண்.

'மாப்பிள்ளை, என் சொத்தெல்லாம் உங்களுக்குத்தானே. நீங்க வேலைக்குப் போக வேணாம்' என்று (அபத்தமான) பாசத்தோடு மாமனாரும் வற்புறுத்த, அந்த இளைஞனும் சம்மதித்துவிட்டான். ஆனால், இரண்டு மாதங்களுக்கு மேல் வீட்டிலேயே இருக்கப் பிடிக்காமல் வேலைக்குக் கிளம்பி விட்டான். உடனே அந்தப் பெண் தற்கொலை முயற்சியில் இறங்கிவிட்டாள்.

பக்குவம் இல்லாத சிந்தனைகள்தான் பெரும்பாலும் தற்கொலை முயற்சிகளுக்குக் காரணமாக அமைகின்றன. தற்போதைய கல்வியும் வேலையும் இந்தப் பக்குவத்தை அளிக்கத் தவறுகின்றன என்பதுதான் வேதனையான உண்மை'' என்கிறார் டாக்டர் ரங்கராஜன்.

**- ஜி.எஸ்.எஸ்.**

தற்போதய கல்வியும் வேலையும் தேவையான பக்குவத்தை அளிக்காதது வேதனையான உண்மை!



கடந்த 1999ல் மனைவிக்குரிய பொறுப்புகளை மட்டுமே செய்து கொண்டிருந்த திருமதி சிவராணி, ஆர்வம் காரணமாகத் தொழில் முனைவராகி, இன்று நூற்றுக்கணக்கானவர்களுக்கு வேலை வாய்ப்பு கொடுத்துக் கொண்டிருக்கிறார். இதில் இருநூறுக்கும் மேற்பட்ட படித்த, படிக்காத பெண்களும் அடக்கம். "பெண்களுக்கு இன்று வேலை வாய்ப்புகள் கொட்டிக் கிடக்கின்றன" என்று பட்டியலிடுகிறார்...

# இல்லம் முதல்...

● கிராமத்துப் பெண்கள் முதலில் செய்ய வேண்டியது மகளிர் சுய உதவிக் குழுவில் சேருவது. இதில் இரண்டு ஆதாயங்கள். நீங்கள் சுய தொழில் துவங்கும்போது நிதி உதவி கிடைக்கும். அடுத்தது சுயதொழில் பயிற்சியும் கிடைக்கும்.

● இன்று 300 கோடிக்கு பிஸினஸ் செய்யும் விஜ்ஜட் பப்பட் அப்பள நிறுவனம் 80 ரூபாய் மூலதனத்தில் துவங்கப்பட்டது. எனவே சிறு துவக்கம், பிரமிக்கத்தக்க சாதனைகளுக்கு வழி வகுக்கும். மெழுகுவர்த்தி, ஊதுபத்தி செய்வது மிக எளிய தொழில்நுட்பம். அதிலும் இப்போதெல்லாம் அழகியல் உணர்வோடு தயாரிக்கப்படும் கலர் கலரான மெழுகுவர்த்திகளுக்கு நல்ல கிராக்கி. மூன்று, நான்கு பேராகச் சேர்ந்து இதில் ஈடுபடலாம்.

● வத்தல், வடகம், அப்பளம், மசாலாப் பொடி, மிளகாய்ப் பொடி என்று தயாரித்து அருகிலுள்ள தாலுக்கா மாவட்டத் தலை நகரங்களில் மார்க்கெட் செய்யலாம்.

● சோப்பு, சொட்டு நீலம் செய்வதும் ஓர் எளிய தொழில்நுட்பம்தான். ஊறுகாய் போட்டு பாட்டிலில் அடைத்து விற்கலாம். சிறிய சிறிய பிளாஸ்டிக் பேக்கட்டுகளில் அடைத்து விற்றாலும் நல்ல லாபம் கிடைக்கும்.

● பெண்களுக்குப் பெரிய வேலை வாய்ப்புக் கொடுப்பது தையல் தொழில். மாவட்ட அளவில் பெண்களுக்கு இலவச தையல் பயிற்சி கொடுக்கப்படுகிறது. குறைந்தபட்சம் மாதம் 3000 ரூபாய் சம்பாதிக்க முடியும்.

● கிராமப்புற படிக்காத பெண்களுக்குப் பெரிய வரப்பிரசாதமாக வந்திருப்பது தேசிய கிராமப்புற வேலைவாய்ப்பு உறுதி திட்டம். இந்தத் திட்டப்படி வருடத்துக்குக் குறைந்தது 100 நாட்கள் வேலை கொடுத்தாக வேண்டும்.


* சிவராணி

● கிராமத்திலிருந்து சென்னை போன்ற நகரங்களுக்கு வருகிறீர்களா? குறைந்தது மாதம் 2500 ரூபாய் சம்பாதிக்க வழி இருக்கிறது. எக்ஸ்போர்ட் கார்மெண்ட் தொழிற்சாலைகள் சிலவற்றில் பெண்களைச் சக்கையாகப் பிழிந்து சம்பளத்தையும் குறைவாகக் கொடுக்கிறார்கள். எனவே நல்ல நிறுவனமாகத் தேர்ந்தெடுத்துச் செல்ல வேண்டும். தவிர, சுய தொழில் செய்வதென்றால் அவுட்டோர் கேட்டரிங், கையேந்தி பவன்கள் நடத்திப் பிழைக்கலாம்.

● ஹவுஸ் கீப்பிங் காண்ட்ராக்டர்கள் தற்போது பெரும்பாலும் பெண்களையே வேலைக்கு எடுக்கிறார்கள். ஓரளவு படித்த பெண்கள் அழகுக் கலை நிபுணருக்கு உதவியாளராக, எஸ்.டி.டி. பூத் காப்பாளராகச் செல்லலாம்.

● பன்னிரண்டாம் வகுப்புவரை படித்த பெண்கள் வீட்டிலேயேகூட கம்ப்யூட்டர் வைத்துக்கொண்டு டேட்டா

என்ட்ரி வேலைகளைச் செய்து தரலாம். அழகுக் கலை நிபுணர், ஸ்டார் ஹோட்டல், ஹவுஸ் கீப்பிங், ஃபேஷன் டிஸைனர், உணவு மற்றும் குளிர் பானங்கள் செய்யும் பயிற்சி என்று பெண்களுக்கு வாய்ப்புகள் நிறையவே இருக்கின்றன.

● ஸ்டார் ஹோட்டல்களில் மலர் அலங்காரம் என்பது புதிய வேலை வாய்ப்பாகப் பெண்களுக்கு வந்திருக் கிறது. இதைச் செய்பவர்கள் மலர்களை வாங்கி பொக்கே செய்து விற்கலாம். இந்த வியாபாரத்தில் ஆயிரக்கணக்கில் சம்பாதிக்கும் பெண்களும் இருக்கிறார் கள்.

● ப்ளஸ்டூ படித்த உடல் தகுதியுள்ள பெண்கள், மத்திய பாதுகாப்பு துறைகள், மாநில காவல் துறைகள் ஆகியவற்றில் காவலர்கள் வேலைக்கு மனுச் செய்யலாம்.

● கலை மற்றும் அறிவியல் பட்டப் படிப்பு முடித்த பெண்கள் மேற் கண்ட துறைகளில் சப்-இன்ஸ்பெக்டர் வேலைக்கு மனுச் செய்யலாம். இது தவிர, சர்வீஸ் கமிஷன் க்ரூப் இரண்டு தேர்வு எழுதி பாஸ் செய்தால், எடுத்தவுடன் ஐந்து இலக்கச் சம்பளத்துடன் கௌரவமான வேலை கிடைக்கும். ஸ்டார் ஹோட்டல் களில் ஃப்ரண்ட் ஆபீஸ், டைனிங் ஹால் போன்றவற்றில் நல்ல வாய்ப்புகள் உண்டு.

● பி.இ. படித்துவிட்டு மென்பொருள் மேம்பாட்டில் சரியான வாய்ப்புக் கிடைக்காவிட்டால், பி.பி.ஓக்கள் மற்றும் கே.பி.ஓக்களில் தற்காலிகமாக வேலை பார்க்கலாம். அனைத்துக்கும் தேவை திறந்த மனதும் விசாலமான பார்வை யும்தான்.

– கௌசி



# இன்ஜினீயரிங் வரை...

**உடுமலைப்பேட்டை, அமிர்தநேயன்:**

எனது தந்தை கல்கி பத்திரிகையின் ஏஜண்ட்டாக இருந்தார். அப்போது அறிமுகமான கல்கியைத் தொடர்ந்து வாசித்து வருகிறேன். பொன்னியின் செல்வன் போன்ற படைப்புகளும், சிறுகதைகளும் எனக்குள் பெரிய தாக்கத்தை ஏற்படுத்தியுள்ளன. கல்கி என்றாலே ஒரு மரியாதை மனத்துள் ஏற்பட்டுவிடும். நான் தவறாமல் படிப்பது தலையங்கத்தை. இந்த வாரம் ராமர் பாலம் தலையங்கம் அற்புதம். கண்டவர் விண்டிலர்.. விண்டவர் கண்டிலர்... என்பர். பெரும்பாலானோரின் நம்பிக்கையைப் புண்படுத்தும் விதமாக முதல்வர் பேசியது கண்டிக்கத்தக்கது.

* சுபாஷ் சந்திரன்

**மன்னார்குடி, சரஸ்வதி இராஜேந்திரன்:**

இன்றளவும் பாரம்பரியத்தைத் தொடரும் பத்திரிகை கல்கி. தேர்ந்தெடுத்துக் கொடுக்கும் மணியான சிறுகதைகள், தைரியமான தலையங்கம் ஆகியவை எனக்கு மிகவும் பிடிக்கும். மருத்துவம் குறித்து அளிக்கும் விஷயங்கள் மிக உபயோகமானதாக இருக்கின்றன. சட்டப் பிரச்னைகள் குறித்த பகுதியை ஒவ்வொரு வாரமும் வெளியிடுங்களேன்!

* ப.மூர்த்தி

**இராசிபுரம், சுபாஷ்சந்திரன்:**

கல்கியில் வெளியாகும் ஆன்மிகப் பகுதிகள் மனத்தை நெறிப்படுத்தி, வாழ்க்கைக்கு வழிகாட்டியாக அமைகின்றன. இன்ஜினீயரிங் படிக்கும் என் மகன்கூட கல்கியை விரும்பிப் படிக்கிறான். இந்த வார தலையங்கம் மிகச் சிறப்பு. ராமர் 'சோம பானம்' குடித்ததாக வால்மீகியே குறிப்பிட்டுள்ளார் என்று கலைஞர் சொன்னது தேவையற்றது. பாஸிடிவான விஷயங்கள் எத்தனையோ இராமாயணத்தில் உள்ளன. ஒருவனுக்கு ஒருத்தி கோட்பாடு, சகோதர ஒற்றுமை... இப்படி எவ்வளவோ இருக்க, பிரச்னையைத் தூண்டும் விதமாகப் பேசியது தவறு. ஆட்சி, அதி

* அமிர்தநேயன்

# தித்திக்கும் திங்கள்

காரத்தில் இருப்பவர்கள் எல்லோருக்கும் பொதுவான வர்களாக இருக்க வேண் டும்.

**பெங்களூர் ப.மூர்த்தி:**

நான் தி.மு.க. அபிமானி. கலைஞரை எனது தலைவராக ஏற்றுக்கொண்டவன். ஆனாலும் 'ராமர்' விஷயத்தில் அவர் பேசியதைக் கண்டிக்கிறேன். ராமர் உண்மையோ, பொய்யோ, 'கடவுள்' என்ற நம்பிக்கையோடு காலம் காலமாக வணங்கி வரும் ஒரு சமயத்தவர்களைப் புண்படுத்தி விட்டார். ஒரு திட்டத்தைச் செயல்படுத்த முனையும்போது முட்டுக்கட்டைகள் பல்வேறு கோணங்களிலிருந்து வரும். உடனே உணர்ச்சிவசப்பட்டு இப்படிப் பேசுவது மூத்த தலைவருக்கு அழகல்ல. இதைத் தலையங்கம் நன்கு சுட்டி காட்டியது. கல்கியின் மற்ற பகுதிகள் பற்றிச் சொல்வதென்றால் எல்லாமே அறிவுசார்ந்து உள்ளன. மற்ற மாநிலங்களில் நடைபெறும் அரசியல் நடவடிக்கைகள் குறித்தும் வெளியிடுங்கள்.



# நீங்கள் சொன்னால் எடுபடும்!

**சென்னை, கிருஷ்ண.ராஜ்கோபால்:**

ஐம்பது வருட கல்கி வாசகன் நான். காலத்தின் மாற்றத்துக்கேற்ப கல்கியும் தன்னை மாற்றிக்கொண்டு வருகிறது. ஆயினும் அதன் தரம் என்றும் மாறியதில்லை. இளைஞர்களுக்கான கல்வி சார்ந்த பகுதி, மாறிவரும் வாழ்க்கை முறையில் அவர்கள் நமது கலாசாரத்தைப் பின்பற்ற வேண்டிய அவசியத்தை எடுத்துச் செல்லலாம். நீங்கள் சொன்னால் அது நிச்சயம் எடுபடும். ஏனெனில் அதற்கான தகுதி கல்கிக்குத்தான் உண்டு. மற்ற பத்திரிகைகள் சொல்ல முடியாது. ஏனெனில் அவர்களே கலாசாரப் பாதையை விட்டு விலகிவிட்டார்கள்!





# கல்கி



2007 அக்டோபர் 7
சர்வஜித் புரட்டாசி 20
மலர் : 66
இதழ் : 10

தமிழ்த்திரு
நாடுதன்னைப்
பெற்ற தாயென்று
கும்பிடடி பாப்பா

\- பாரதியார்

## ஆத்திக ஆங்காரம்; நாத்திகத் தீவிரவாதம்!

**வே**தாந்தி என்கிற முன்னாள் பா.ஜ.க. எம்.பி. தமது பெயருக்குரிய விவேகமின்றி, ஒரு தீவிரவாதியைப் போல் பேசியது மிகவும் கேவலம். சக அரசியல்வாதி ஒருவரின் பேரில் வெறுப்பை வெளிப்படுத்தியதுடன் வன்முறையைத் தூண்டும் வகையில் அமைந்த அவரது பேச்சினை ஹிந்து மதத் தலைவர்களும் பா.ஜ.க. தலைவர்களும் வன்மையாகக் கண்டித்திருக்க வேண்டும். அவ்வாறு கண்டிக்காமல் மௌனம் காத்ததும் சரி, அவருடைய பேச்சை சிலர் நியாயப்படுத்தியதும் சரி, வேதாந்தியின் வன்முறை சிந்தனையை ஆதரிப்பதற்குச் சமமே ஆகும்.

ஹிந்து மதம் மட்டும் அல்ல; அனைத்து மதங்களுமே அன்பையும் அமைதியையும் சம மனிதர்களை மதிக்கும் பண்பையும்தான் வலியுறுத்துகின்றன. ஆதிகால மத நூல்களில் சில கொடூரங்கள், குரூரங்கள் இடம்பெற்றிருப்பது உண்மையாயினும், அவற்றை விலக்கிவிட்டு நல்ல அம்சங்களை மட்டுமே ஏற்று வாழ்வை அர்த்தமுள்ளதாக்கிக் கொள்ள வேண்டும். மாறாக, காட்டுமிராண்டித்தனமான நடவடிக்கைகளை மதத்தின் பெயரால் நியாயப்படுத்த ஆரம்பித்தால், அந்த மதத்தின் மதிப்புதான் குறைந்துபோகும்.

மேலும், கருணாநிதி ராம பக்தர்களை அவமானப்படுத்தும் தவறைச் செய்தார் என்பதற்காக, அவரது மகளின் வீட்டைத் தாக்குவதோ, பஸ்களை எரிப்பதோ மாபெரும் பாதகங்கள். கருணாநிதி பேசியது முறையல்லதான். ஆனால், ஒரு தவறை இன்னொரு தவறைக்கொண்டு கண்டிக்கவோ, தண்டிக்கவோ முடியாது.

சராசரி மக்களுக்கும் தொண்டர்களுக்கும் இந்த அறிவும் கட்டுப்





பாடும் அமைவது கடினம். பொறுப்பில் இருக்கும் தலைவர்கள்தான் உணர்ச்சிகளுக்கு இடங் கொடாமலும் அவற்றைத் தூண்டாமலும் நடுநிலைப் பார்வையுடன் செயல்பட்டு, தொண்டர்களை வழிநடத்த வேண்டும்.

ஆனால் வேதாந்தி, ஹிந்துத் தீவிரவாதிபோல் பேசுகிறார் என்றால், கருணாநிதியோ நாத்திகத் தீவிரவாதியாகக் குரல் கொடுக்கிறார். ''ராமன் ஒரு குடிகாரன்'' என்று பேசத் துணிகிறார்! பெங்களூரில் தமது மகள் வீட்டைத் தாக்கிய மதவெறியரின் செயலை, சராசரி ராம பக்தர்களின் மீது ஏற்றி, 'ராம பக்தர்களின் லட்சணம் இதுதானா?' என்று தூண்டுகிறார்! உடனே தி.மு.க.வினர் அமைச்சர்கள் தலைமையில் பா.ஜ.க. அலுவலகத்தை அடித்து நொறுக்குகின்றனர்!

நியாயமாகப் பார்த்தால், இவ்வளவு சர்ச்சைகளுக்கு உட்பட்டிருக்கும் சேது சமுத்திர திட்டத்தை மறுபரிசீலனைக்கு உட்படுத்தி, எதிர்ப்பாளர்களையும் அரவணைக்கும் ஒரு குழுவின் உதவியோடு வெள்ளை அறிக்கை வெளியிட வேண்டும். சேது சமுத்திர திட்டத்தின் வரவு செலவுகள், கான்ட்ராக்ட் விவரங்கள், சுற்றுச்சூழல் பாதுகாப்புக்கான முன்னெச்சரிக்கைகள், ராமர் பாலத்தைத் தகர்க்காமல் திட்டத்தை நிறைவேற்றுவதற்கான சாத்தியக்கூறுகள், திட்டம் நிறைவேறிய பிறகு அதனால் கிடைக்கக்கூடிய லாப - நஷ்டங்கள் என்று அனைத்தையும் ஆராய்ந்து அதில் அறிவிக்க வேண்டும். மத்திய அரசின் தலைமைப் பொறுப்பில் உள்ள பிரதமர் ஒரு வார்த்தை சொல்ல வேண்டியதுதான்; இது நடந்துவிடும்.

ஆனால், மொத்த திட்டமே ஏதோ தமிழக அரசு செயல்படுத்துவது போன்ற மாயத் தோற்றம் கொண்டுவிட்டது. இத்திட்டத்தை நிறைவேற்றத் தடையாக இருப்பவர்களை எதிர்த்து பந்த் நடத்துவோம் என்று தமிழக முதல்வரே குரல் கொடுக்கிறார்!

இவையெல்லாம் எதிர்ப்புணர்வையும் வன்முறையையும் அதிகரிக்கத்தான் உதவுமே யொழிய, கருணாநிதி அன்ட் கோ நினைக்கிற மாதிரி சேது சமுத்திரத் திட்டத்துக்கும் ராமர் பால தகர்ப்புக்கும் ஆதரவைப் பெற்றுத் தராது.

அரசுப் பொறுப்பில் இருப்போர் அறிவித்த பந்த் என்பதாலும் குண்டர்களுக்கு அஞ்சியும் மக்கள் கடை அடைத்து ஒத்துழைக்கலாம்; ஆனால், அவர்கள் மனத்திலுள்ள பக்தி வெள்ளத்துக்கும் உணர்ச்சி அலைகளுக்கும் யாரும் 'பந்த்' உத்தரவு போட முடியாது. ●




# என்றும் ஆச்சர்யம்!

"ஜனா கிருஷ்ண மூர்த்திக்குச் சொந்த ஊர் மதுரை. சட்டம் படித்து விட்டு, மிகவும் பிஸியான வக்கீலாக அவர் பிராக்டீஸ் செய்து கொண்டிருந்த சமயத்தில்தான், ஆர்.எஸ்.எஸ். இயக்கத்தின் முக்கியஸ்தர்களுள் ஒருவரான தீனதயாள் உபாத்யாயாவின் மரணம் நிகழ்ந்தது. அப்போது, அவர் விட்டுச் சென்ற பணிகளைத் தொடர்ந்து செய்வதற்கு ஏராளமான ஆர்.எஸ்.எஸ். தொண்டர்கள், முழு நேர ஊழியர்களாக வர வேண்டும் என்று அறைகூவல் விடுக்கப் பட்டவுடன், தம்முடைய கறுப்புக் கோட்டுக்கு விடை கொடுத்துவிட்டு, முழு நேர ஆர்.எஸ்.எஸ். ஊழியராக தம்மை அர்ப்பணித்துக் கொண்டார். இன்று அதே தீனதயாள் உபாத்யாயாவின் பிறந்த தினத்தன்று (செப் 25) அவர் காலமானது குறிப்பிடத்தக்கது'' என்று அண்மையில் மறைந்த பா.ஜ.க.வின் மூத்த தலைவர்களுள் ஒருவரும், முன்னாள் மத்திய அமைச்சருமான ஜனா.கிருஷ்ணமூர்த்தி பற்றி நம்மிடம் நினைவுகூர்ந்தார் தமிழக பா.ஜ.க. தலைவர் இல.கணேசன்.

''மிகவும் எளிமையானவர். நற்பண்பாளர். தெளிவான சிந்தனை கொண்டவர். எந்த ஒரு விஷயமானாலும் அது பற்றிய தமது கருத்துக்களை அழுத்தம் திருத்தமாக, அதே சமயம் அனைவருக்கும் புரியும்படி எடுத்துரைப்பார்.

பல வருடங்களுக்கு முன்னால் சென்னை அசோக் நகரின் அடுக்கு மாடிக் குடியிருப்பு ஒன்றில், இரண்டாவது மாடியில் ஜனா வசித்து வந்தார். நானும் சில நண்பர்களும் அடிக்கடி அவரை சந்திக்கச் செல்வோம். அவருடன் பேசி முடித்துவிட்டு நாங்கள் புறப்படும்போது, ஒவ்வொரு தடவையும் தவறாமல் இரண்டு மாடிப் படிகள் இறங்கி வந்து எங்களை வழியனுப்பி வைப்பார். 'இப்படிச் செய்யணுமா?' என்றால், 'நம் வீட்டுக்கு வருகிறவர்களை வழியனுப்பி வைப்பதுதான் மரியாதை' என்பார்.

எனது மூத்த சகோதரரின் சஷ்டியப்த பூர்த்தியின்போது, மத்திய சட்ட அமைச்சராக இருந்த ஜனாவுக்கும் அழைப்பிதழ் அனுப்பியிருந்தோம். அவருக்கு டெல்லியில் அன்றைக்கு ஏதோ முக்கிய பணி என்பதால் வர முடியாத சூழ்நிலை. தம்முடைய உதவியாளர் மூலமாக ஒரு போன் செய்திருந்தாலே போதும். ஆனால், அவர் தம் கைப்படக் கடிதம் எழுதி வர முடியாமைக்கு வருத்தம் தெரிவித்திருந்தார். அதைப் பார்த்த அனைவருக்கும் ஒரே ஆச்சர்யம். என்றுமே அவர் ஆச்சர்யப்பட கூடியவராகத்தான் வாழ்ந்து மறைந்திருக்கிறார்'' என்கிறார் இல.கணேசன்.

– எஸ்.சந்திரமௌலி

வந்துவிட்டார்! திகம்பர சாமியார்

ஆங்கில நாவல்களுக்கு இணையாக

# THRILLERS IN தமிழ்

**1930-களில்**

**தமிழகத்தை கலக்கி**

தமிழ் வாசகர்களை அசர வைத்த

**வடுவூர் கே. துரைசாமி ஐயங்கார்**, பி.ஏ.,

எழுதிய நாவல்கள் – புதுப்பொலிவுடன்

ஆங்கிலத்தில் ஷெர்லாக் ஹோம்ஸ்

நவீன காலத்தில் **007** ஜேம்ஸ்பாண்டு

தமிழகத்தில் அன்றும் இன்றும் என்றும்



# திகம்பர சாமியார்



என்று போற்றப்படக் கூடிய **தரமான, த்ரில்லர்கள்**

விறுவிறுப்பான **துப்பறியும்** கதைகள்

கையில் எடுத்தால் கீழே வைக்க முடியாத அளவிற்கு கட்டிப் போடும்.

உவகையூட்டும் நாவல்கள் வெளிவந்து விட்டன.

வரம்பு மீறல்கள், நயவஞ்சகம் சூழ்ச்சி ஆகியவற்றை பிரமிப்பூட்டும் வகையில்

முறியடிக்கும் திகம்பர சாமியார் மற்றும் பிற கதாபாத்திரங்கள்.



| | | | |
|---|---|---|---|
| 1. | பூர்ண சந்திரோதயம் | (5 பாகங்கள்) ..... | ரூ. 650.00 |
| 2. | கும்பகோணம் வக்கீல் | (2 பாகங்கள்) ..... | ரூ. 200.00 |
| 3. | மாயா விநோதப் பரதேசி | (3 பாகங்கள்) ..... | ரூ. 365.00 |
| 4. | மேனகா | (2 பாகங்கள்) ..... | ரூ. 250.00 |
| 5. | மதன கல்யாணி | (3 பாகங்கள்) ..... | ரூ. 355.00 |
| 6. | சௌந்திர கோகிலம் | (4 பாகங்கள்) ..... | ரூ. 460.00 |
| 7. | பாலாமணி (அ) பக்காத் திருடன் | (2 பாகங்கள்) | ரூ. 170.00 |
| 8. | வசந்த மல்லிகா | ..... | ரூ. 110.00 |
| 9. | வித்யாசாகரம் | ..... | ரூ. 100.00 |
| 10. | பன்னியூர் படாடோப சர்மா | ..... | ரூ. 150.00 |
| 11. | திவான் லொடபடசிங் பகதூர் | ..... | ரூ. 40.00 |
| 12. | திரிபுரசுந்தரி (அ) திகம்பரசாமியார் திடும்பிரவேசம் | | ரூ. 130.00 |
| 13. | வஸந்த கோகிலம் | ..... | ரூ. 90.00 |
| 14. | தங்கம்மாள் (அ) தீர புருஷனின் தியாக கம்பீரம் | | ரூ. 75.00 |







அல்லயன்ஸ்

(நூற்றாண்டு கண்ட முதல் தமிழ்ப் புத்தக நிறுவனம்)

ப.எண். 244, ராமகிருஷ்ணா மடம் சாலை,

தபால்பெட்டி எண்: 617, மயிலாப்பூர்,

சென்னை - 600 004, தொலைபேசி : 24641314

e-mail : www.alliancebook.com

visit us at : Srinivasan@alliancebook.com

Venkatesh

# நம்நாடு

மலையாள லயனை' தமிழ்ல பண்ணியிருக்காங்க. புதுசா அரசியல் கட்சி ஆரம்பிச்சிருக்கிற சரத்தை ஆலாபனை செய்ற விதத்துல திரைக்கதை அமைக்கப் பட்டு, அவரோட மனசை குளிர வச்சிருக் காங்க. சாக்கடை அரசியல்வாதி நாசரை, மகன் சரத் திருத்தி சுத்திகரிக்கிற கதை.

உள்துறை அமைச்சரா பவர்ஃபுல் கேரக் டர்ல மிடுக்குக் குறையாத சரத். அப்பாவை வெறுக்கும்போதும் பாசத்துக்குக் கட்டுப் பட்டு கலங்கும்போதும் அண்டர்ப்ளே பண்ணி அழகா நடிச்சிருக்கார். அவருக்கு ஜோடியா மலையாளப் புது வரவு கார்த் திகா, குடும்பக் குலவிளக்கு. கண்கள்ல சோகத்தைத் தேக்கி, வில்லன்கள்கிட்ட நந்து ஓடி, மனைவியா தஞ்ச மடையறவர், மோசமா தெரி பறது கவர்ச்சி உடை கள்லதான். கல்வி அமைச்சரா நாசர் கலக்கி எடுத்திருக்கார். நாட்டு நடப்பை புட்டுப் புட்டு வச்சி, மருமகன்களுக்கு ஜால்ரா போட்டு உயிர் விடும்போது ஒரு சின்ன திடுக்! பொன்வண்ணனும் சரண்ராஜும் கள்ளத்தனத்தை உள்ளே சுமந்துக்கிட்டு வில்லத்தனம் செய்றது நல்லாருக்கு. பி.ஏ.வா வர்ற ரமேஷ்கண்ணா காமெடிக்கு உத்தரவாதம் தர்றார். அம்மா கேரக்டருக்கு அக்கா பிரகதி! என்னமோ, மனசுல ஒட்டல!

ஸ்ரீகாந்த் தேவாவா இசை! இரைச் சல்தான் கேட்குது. குத்துப் பாட்டுகூட நம்மை இருக்கைல குந்த வைக் கல. சாக்கடை அரசியலை



வசனம் மூலமா தோலுரிச்சுக் காட்டி யிருக்கார் ரமேஷ்கண்ணா. சூப்பர் சுப்ப ராயனோட ஸ்டண்ட் இடி முழக்கம். ஒளிப்பதிவுக்கு பெருசா வேலை இல்லை.

டைரக்ஷன் சுரேஷ், சரத்தோட ஃபேவரிட் டைரக்டர். அதனாலயோ என்னமோ சரத்தை மட்டும் முன்னிறுத்தினா போதும்னு நெனச்சி திருப்திபட்டிருக்கார். இளைஞரணிச் செயலாளர், முதல் வருக்கு நெருக்கமானவர்... இவ்ளோ இருந்தும் சரத்தை யாருமே மதிக்கறதில்லைங் கறதை நம்ப முடியல. அப்பா மேல அவ்ளோ பாசம் வச் சிருக்கற சரத்தே அவரைக் கொன்னுட்டார்னு நேசக்கார அம்மாவே நம்பறது உறுத் தல். உயிருக்குயிரான காத லன் கொல்லப்பட்டதும் கூலா நீபு கல்யாணம் பண்ணி செட்டிலாகறது ஒட்டை. இப்படி நெறைய சொல்லிக் கிட்டே போகலாம்.

– மதுமிதா



# திருத்தம்

நான் அவனில்லை, வல்லவன், துள்ளல்னு மூணு படங்களோட கலவை. ப்ரியாங்கற பேர்ல எந்தப் பொண்ணு இருந்தாலும் காதலிச்சுக் கல்யாணம் பண்ணிட்டு எஸ்கேப் ஆகுற ஹீரோ. புளிச்சுப்போன ஃப்ளாஷ்பேக்!

ஹரிகுமார் நல்லா பண்றார். ஆனா பார்த்துப் பார்த்து சலிச்சுப்போன கேரக்டரையே திரும்பப் பண்ணினதால எல்லாமே விழலுக்கு இறைச்ச நீரா யிடுது.

எம்.எஸ்.பாஸ்கரின் காமெடி கலகல. இன்னும் அவரை பயன்படுத்தியிருக்கலாம். பிரியங்கா நடிப்பில் யதார்த்தம் கொடிகட்டிப் பறக்குது. டாக்டர் சண்முகம் கேரக்டர்ல நாசர் ரசிக்க வைக்கறார். மான்ஸியும் சுஜாவும் கவர்ச்சிக்கு மட்டும்னு முடிவு பண்ணிதான் தலை காட்டியிருக்காங்க.

பிரவீன் மணியோட பின்னணி இசை பிரமாதம். ஆனா, பாடல்கள்தான் மனசுல ஒட்டல. ஜீவன் ஒளிப்பதிவு கண்ணுக்கு விருந்து.

டைரக்ஷன் பொன்ராமன். திரைக்கதைல இன்னும் திருத்தம் பண்ணியிருக்கணும். வலுவான காட்சிகள், ஆழமான வசனம்னு பல விஷயங்கள்ல இன்னும் கவனம் செலுத்தியிருக்கலாம்.

– ரேவதி

பாசத்துக்காக ஏங்கற மகனை பரிதவிக்க விடற தந்தையைப் பத்தின கதை. இதுக்குள்ள ஒரு அழகான காதலை நுழைச்சு இயல்பா சொல்ல ட்ரை பண்ணியிருக்காங்க.

புதுமுகம் ஜெமினிதான் ஹீரோ. மெகா ஹீரோக்கள் மாதிரி இல்லாம தன்னால செய்யக் கூடியதை யதார்த்தமா செஞ்சா இன்னும் வளர வாய்ப்பிருக்கு. லக்ஷ்மி ராய்க்கு நல்ல ஸ்கோப். பயன்படுத்திக் கிட்டு நடிச்சிருக்காங்க. அதே நேரத்துல தன்னோட அஸ்திரமான க்ளாமரையும் கைவிடல. இரண்டாவது நாயகியா வர்ற பாயல், பாவம். நாசர், நாகேஷோட பொறுப்பான பங்குக்கு சல்யூட் அடிக்கலாம்.

ஸ்ரீகாந்த் தேவா இசையில பாடல்கள் இனிமையா இருக்கு. குறிப்பா, 'எல்.கே.ஜி.ல ஸ்கர்ட்' பாட்டு யூத்ஃபுல் ட்ரீட். காதல் காட்சிகள்ல ஒளிப்பதிவு கொள்ளை கொள்ளுது மனசை. இயக்கம் ராஜ்கண்ணன். பாயலை ஊறுகாய் மாதிரி தொட்டு அப்புறம் காணாம அடிச்சிடுறது, தொய்வடைஞ்சு நிக்கற திரைக்கதை, பலம் குறைந்த வசனங்கள்னு படத்தைப் பின்னுக்கிழுக்கும் விஷயங்கள் நிறைய. நெஞ்சைத் தொட நினைச்சு முடியாமலே போனதுதான் சோகம்.

– அபர்ணா





பல ஆச்சர்யமான கிராமங்களைத் தனக்குள் அடைகாத்துக் கொண்டிருக்கிறது தமிழகம். புதுக்கோட்டை மாவட்டத்தில் இருக்கும் 'மெய்வழிச்சாலை' கிராமத்து மக்கள் சாமிக் குத்தம் வந்துவிடும் என்று கருதி இதுநாள் வரை மின் வசதியை மறுத்து வருகிறார்கள். ஈரோடு மாவட்டம், 'முளையாம்பூண்டி' கிராமத்தில் வசதியும் வாய்ப்பும் அதிகமிருந்தும், சாமிக்கு மட்டும் மச்சு என்ற சாஸ்திரத்தைக் கடைபிடிப்பதால், மாடி வீடு கட்டி வாழ யாரும் தயாராக இல்லை. கோவை மாவட்டத்தில் இருக்கிறது கோடாங்கிப்பட்டி. குறி சொல்லும் குலத்தொழிலை செய்து வரும் இந்த கிராம மக்களின் மத்தியில் இன்று நூற்றுக்கணக்கான பட்டதாரிகள். ஆனாலும் ஜக்கம்

# எங்கிட்ட மோதாதே!

மாவின் கோபத்துக்கு ஆளாகி விடுவோமோ என்ற பயத்தில், டெல்லியில் வேலை செய்தாலும், ஆண்டுக்கு ஒரு மாதம் விடுப்பில் வந்து, குடுகுடுப்பை கோடாங்கிகளாகத் தொழில் செய்கின்றனர். மதுரை மாவட்டத்தின் ஆர்.கல்லுப்பட்டி கிராமத்தில் கந்துவட்டிக்குக் கொடுக்கிறவர்கள் காலடி வைக்கவே பயப்படுகிறார்கள். காரணம், அங்கிருக்கும் அய்யனார் சாமி இருபத்து நான்கு மணி நேரத்துக்குள் அவர்களைத் தண்டிப்பதாக நம்பி வருகிறார்கள்.

இப்படிப்பட்ட கிராமத்து மக்களிடம், சிறுநீரகங்களாகிய நாங்கள் செயலிழப்பது மிக மிகக் குறைவே. அதற்காக நகரங்களில் வாழும் மக்களைக் குறை சொல்ல வரவில்லை. 'பொன்னையும் பொருளையும் எங்களுக்குக் கொட்டிக் கொடு வெங்கடேசா...!' என்று பெருமாளைப் பார்த்துக் கேட்கும் நகர மக்கள், பெருமாள் கரங்களில் ஏந்தியிருக்கும் சங்குக்குப் பயப்பட்டால் தவறில்லை. பெருமாள் கையில் ஏந்தியிருக்கும் சங்கு வெறும் சங்கல்ல... மனித உடல் இயங்குவதற்கு முக்கிய தேவையான சுண்ணாம்புச் சத்தை, தத்துவார்த்த ரீதியாகச் சுட்டுகிறது. இந்தச் சுண்ணாம்புச் சத்து இல்லையென்றால், சிறுநீரகங்களாகிய நாங்கள் இல்லை. சுண்ணாம்புச் சத்துதான் இரத்தத்தின் காரத்தன்மைக்குக் கர்த்தாவாக இருக்கிறது. அதேபோல நமது தாய் தெய்வ வழிபாட்டில் எலுமிச்சை பழத்துக்கு எப்போதுமே தனி முக்கியத்துவம் உண்டு. எலுமிச்சை பழத்தை ஏந்திக்கொண்டிருக்கும் அம்மன்களே இங்கே அதிகம். எலுமிச்சையின் தத்துவார்த்தம் அமிலத்தன்மை. ஓர் எலுமிச்சை பழத்தை இரண்டாக வெட்டி, அதில் கொஞ்சம் சுண்ணாம்பைத் தடவினால் நொடியில் இரத்தச் சிவப்பாகிவிடும். அதாவது காரத்தன்மையும் அமிலத்தன்மையும் ஒன்று சேர்ந்தால்தான் உயிராகிய சக்தி பிறக்கிறது. உடலில் காரத்தன்மையும் அமிலத்தன்மையும் சம அளவில் இணையும் போதுதான் இரத்தம் பிறக்கிறது... சிறக்கிறது.

# ஜகஜ்ஜால ஜோடி

## சீக்ரெட் ஆஃப் சிறுநீரகம்





இப்படி இரத்தத்தில் காரமும், அமிலமும் சம அளவில் இருப்பதைத்தான் 'ஆசிட் பேலன்ஸ்' என்கிறார்கள். இந்த 'ஆசிட் பேலன்ஸை' நிலைநிறுத்த வேண்டிய தலையாய பொறுப்பைத்தான் எங்களிடம் தந்திருக்கிறார் இறைவன். எங்களது பி.சி.டி குழல்களின் வழியே, காரத்தன்மை, அமிலத்தன்மை இரண்டையும் தண்ணீரோடு சேர்த்து, எவ்வளவு தேவையோ அவ்வளவு துல்லியமாக உறிஞ்சிக் கொள்கிறோம். இதில் எப்போது இடைஞ்சல் வருகிறது என்றால், பி.சி.டி. குழல்கள் செயழிலக்கும்போதுதான். ஏன் அவை செயலிழக்கின்றன என்றால், எங்களின் உள்ளே சுரக்கும் என்சைம்கள் பலகீனமடையும்போது... ஏன் என்சைம்கள் பலகீனமடைகின்றன? கொடிய இரசாயனங்கள் எங்களைத் தாக்கும்போது!

நீங்கள் அருந்தும் குடிநீர், குளிர்பானம், மது வகைகள், ஃபாஸ்ட் ஃபுட், ஜங்க் ஃபுட், மன அழுத்தம் நிறைந்த வாழ்க்கை, நீங்கள் சுவாசிக்கும் காற்றில் கலந்திருக்கும் நச்சுக்கள் மற்றும் சாப்பிடும் மாத்திரை, மருந்துகள் என்று பல விஷயங்கள் அடுக்கடுக்காகப் படையெடுத்து வந்து தாக்கினால் எங்களின் என்சைம்களால் என்னதான் செய்ய முடியும்? இதனால் நாங்கள் செயலிழக்கும் முன்பு, ஹைப்பர் யூரிக், ஹைப்பர் டென்ஷன் என்று ஆரம்பகட்ட அறிகுறிகளைக் காட்டுகிறோம். ஆனால், நீங்கள்தான் புரிந்து கொள்வதில்லை. உங்கள் வாழ்க்கை முறையை மாற்றிக்கொள்ளவும் மனம் வராமல் மரணத்தோடு விளையாட முனைகிறீர்கள். இன்று இந்தியக் கழுகுகள், நாளை இந்தியர்கள் என்ற அவலநிலை வந்துவிடக் கூடாது.

இதற்கு என்னதான் செய்ய வேண்டும்! முதலில் நீங்கள் பருகி வரும் குடிநீர், நச்சு இரசாயனங்கள் இல்லாத தூய குடிநீராக இருக்க வேண்டும். இன்று சந்தையில் விற்கப்படும் பெரும்பாலான அடைக்கப்பட்ட குடிநீர் பிராண்டுகளில் கிருமிகள், பாக்டீரியாக்கள் ஒழிக்கப்பட்டிருக்கலாம். ஆனால், நிலத்தடி நீரை அடைந்த நச்சு இரசாயனங்கள் நீக்கப்பட்டிருக்குமா என்றால் கேள்விக்குறிதான். குடிநீர்ச் சந்தையில் பின்பற்றப்படும் தொழில்நுட்பங்களால் ரசாயனங்களை நீக்க முடியாது என்பதுதான் உண்மை. ஆனால், நமது முன்னோர்கள் பயன்படுத்தி வந்த, ''ஆவியாக்கி வடித்தல்' தொழில்நுட்பத்தைக் கொண்டு, தண்ணீரில் இருக்கும் இரசாயனங்களைப் பிரித்துவிட முடியும். மிகக் குறைந்த செலவில், அரசாங்கமே இதை குடிமக்களுக்கு அறிமுகப்படுத்த முடியும். இந்தத் தொழில்நுட்பத்தைக் கொண்டு, ஒவ்வொரு வீட்டிலும் தினசரி முப்பது முதல் நாற்பது லிட்டர் தண்ணீரை வடித்தெடுக்க முடியும். போகட்டும்! அந்த

10

டாக்டர் பி.ரவிச்சந்திரன்




ஆவியாக்கி வடித்தல் தொழல்நுட்பத்தை எளிமையாக நாங்களே உங்களுக்குச் சொல்லித் தருகிறோம். அதற்கு முன்பு, தண்ணீரும் காற்றும் தக்க வைத்திருக்கும் ஆக்ஸிஜனோடு எங்களுக்கு முக்கியமான இரத்தபந்தம் இருக்கிறது. அதைச் சொல்லிவிடுகிறோம்.

**ஹீ**மோகுளோபின் பற்றிக் கேள்விப்பட்டிருப்பீர்கள். ஆனால், அது இரத்தத்தில் என்ன செய்கிறது என்பதை தெரிந்து வைத்திருக்கிறீர்களா? ஹீமோகுளோபின் ஒரு புரதம். ஒவ்வொரு இரத்த அணுவுக்குள்ளும் உட்கார்ந்து இருக்கும். இரத்த அணுக்கள் உயிருடன் இருக்க வேண்டும் என்றால், அவற்றுக்கு ஆக்ஸிஜன் கட்டாயம் தேவை. நாம் சுவாசிக்கும்போது நுரையீரலுக்குள் ஆக்ஸிஜன் வருகிறது. நுரையீரலுக்குள் வந்து செல்லும் இரத்தத்தில் ஆக்ஸிஜன் ஒட்டிக்கொள்ளும். எப்படி? இரத்த அணுவுக்குள் இருக்கும் ஹீமோகுளோபின், படக்கென்று ஆக்ஸிஜனைப் பிடித்து வைத்துக்கொள்ளும். பிறகு நுரையீரலிலிருந்து பயணத்தைத் தொடங்கும் இரத்தம், உடலின் வேறு எந்தப் பகுதி செல்களில் ஆக்ஸிஜன் இல்லையோ, அங்கே ஆக்ஸிஜனை அள்ளிக் கொடுக்கும் கொடை வள்ளலாக இந்த ஹீமோகுளோபின் மாறிவிடும். இதனால்தான் இதை ஸ்பெஷல் ஹார்மோன் என்று மருத்துவ உலகினர் கொண்டாடுகிறார்கள். இந்த இடத்தில் எங்களுக்கும் ஹீமோகுளோபினுக்கும் என்ன பந்தம் என்பது தானே உங்கள் கேள்வி... தூரத்துச் சொந்தமல்ல, ரத்த சொந்தம்!

எங்களது பி.சி.டி.குழல்கள் குடியிருப்பது கார்டெக்ஸ் பகுதியில். எங்கள் வீட்டுக்குள் இரத்த ஓட்டம், எக்குத்தப்பாகப் பாய்ந்தோடுவதும் இந்த கார்டெக்ஸ் பகுதியில்தான். இந்த கார்டெக்ஸ் பகுதிக்குள் நுழையும் இரத்தத்தில் எந்த அளவு ஆக்ஸிஜன் இருக்கிறது என்பதை, அதிலிருக்கும் இரத்த அணுக்களைக் கணக்கிட்டுச் சொல்வது இந்த பி.சி.டி. குழல்கள்தான். எப்படியென்றால் ஆக்ஸிஜன் அளவைக் கணக்கிடுவதற்கென்றே பி.சி.டி.யில் விசேஷ தணிக்கைச் சாதனங்கள் (சென்சார்கள்) இருக்கின்றன. ஆக்ஸிஜன் அளவு குறைவாக இருந்தால், உடனே ஆக்ஸிஜன் சென்சார்கள் தகவலைத் தரும். தகவலைப் பெற்றுக்கொண்டு, எரித்தோபொயட்டின் (Erythropoietin) என்ற இரசாயனத்தை உடனடியாக நாங்கள் உற்பத்தி செய்வோம். இந்த இரசாயனம், துறுதுறுவென்று புறப்பட்டு எலும்பு மஜ்ஜையை அடையும். அங்கே இருக்கும் விதையணுக்களுக்கு அதாவது ஸ்டெம் செல்களுக்குத் தகவலைச் சொல்லி, இரத்த அணுக்களை உற்பத்தி செய்யச் சொல்லும். ஸ்டெம் செல்கள் உற்பத்தி செய்யும் இரத்த அணுக்கள், இரத்தத்தில் சேர்ந்து, இரத்தத்தின் ஹீமோகுளோபின் அளவை இயல்பான நிலைக்குக் கொண்டு வரும். உங்கள் ஒவ்வொருவரது இரத்தத்திலும் ஹீமோகுளோபின் இயல்பான அளவு என்பது ஒரு டெஸி லிட்டருக்கு 12mg முதல் 15mgவரை இருக்க வேண்டும். இந்த அளவை நிலை நிறுத்துவதே நாங்கள்தான். இந்த அளவு கூடினாலோ அல்லது குறைந்தாலோ உங்கள் உடலில் நிகழும் பகீர் மாற்றங்கள் என்ன தெரியுமா? தெரிந்துகொள்ள வேண்டுமா? அப்புறம் ஆவி வடித்தல் தொழில்நுட்பம்..? எல்லாம் அடுத்த வாரம் பார்ப்போம்.

*(பயணம் தொடரும்)*

உற்சாகமாய் இருக்கிறார் வஸந்த். நீண்ட நாட்களுக்குப் பிறகு அவர் இயக்கி வெளிவந்திருக்கும் 'சத்தம் போடாதே' சத்தமில்லாமல் 'ஹிட்'டடித்திருக்கிறது. பாராட்டு மழையில் நனைந்து கொண்டிருந்த ஒரு மாலையில் நாம் வஸந்தை சந்தித்துப் பேசினோம்.

**எப்படிப் பிடித்தீர்கள் இந்த நிஜக் கதையை?**

''பிரியா கண்ணன் என்ற மகப்பேறு மருத்துவ நிபுணர் யதேச்சையாக என்னிடம் ஒரு நிஜ கேரக்டர் பற்றிச் சொன்னார். ஆண்மை இல்லாத ஒருவன், தன் மனைவியை எப்படியெல்லாம் கொடுமைபடுத்தினான்; பழி



* வஸந்த்

# கண் கலங்கினேன்... கதையாக்கினேன்!

வாங்கினான் என்று அறிந்தபோது, நான் அதிர்ச்சி அடைந்தேன். அந்த மனிதர் இப்போது உயிருடன் இல்லை என்றாலும், அவருடைய உறவினர்களுடன் பேசி மேலும் பல தகவல்களைத் தெரிந்துகொண்டேன். அதுதான் நீங்கள் திரையில் பார்த்த அய்யம் பேட்டை காளிதாஸ் ரத்தினவேல். இது ஒரு பக்கம். ஆல்கஹாலிக் அனானிமஸ் அமைப்பினர் ஏற்பாடு செய்திருந்த விழா ஒன்றுக்கு என்னை அழைத்திருந்தார்கள். அந்த நிகழ்ச்சியில், போதையிலிருந்து மீண்டவர்கள் சிலர் தாங்கள் போதைக்கு அடிமையாகி இருந்த போது எப்படி எல்லாம் மோசமாக நடந்து கொண்டோம் என்று அழுதுகொண்டே வெளிப்படையாகச் சொன்னபோது, நான் கண் கலங்கி விட்டேன். அதிக குடிப்பழக்கம் ஆண்மையைப் பாதிக்கும் என்று தெரிந்துகொண்டபோது, இரண்டையும் இணைத்து ஒரு த்ரில்லராகக் கொடுக்க முடிவு செய்தேன். 'சத்தம் போடாதே' உருவானது''



**பிருத்விராஜ், பத்மப்ரியா இருவரும் தமிழில் ரொம்பப் பிரபலமானவர்கள் இல்லை. நித்தின் சத்யாவோ புது முகம். ரிஸ்க் எடுக்கிறோமே என்று தோன்றவில்லையா?**

''எனக்கு நல்ல பர்சனாலிட்டி உள்ள ஹீரோ தேவைப்பட்டார். அவர் ஒரு ரொமான்டிக் ஹீரோ



வாகவும் அதீத ஹியூமர் கேரக்டருக்குப் பொருத்தமாகவும் இருக்க வேண்டும். இந்த மூன்று கண்டிஷன்களுக்கும் பொருத்தமானவர் பிருத்விராஜ் தான் என்று நினைத்தேன். பத்மப்ரியா வழக்கமான மரத்தைச் சுற்றிப் பாட்டுப் பாடும் நடிகை இல்லை. அழுத்தமான நடிப்பு தான் அவரது பெரிய ப்ளஸ் பாயிண்ட். இல்லையென்றால் மேக் அப்பே இல்லாமல் கத்திக் கதறி க்ளைமாக்சில் நடித்திருப்பாரா? நித்தின் சத்யா கேரக்டருக்கு நான் ஏற்கெனவே தெரிந்த முகம் எதையும் காட்ட விரும்பவில்லை. அப்பாவித்தனம், வில்லத்தனம் இரண்டையும் வெகு அற்புதமாகக் கொண்டுவந்துவிட்டார் நித்தின்.''

**நூறு குழந்தைகளின் புன்னகையைச் சிறைப் பிடிக்கச் சிரமப்பட்டீர்களா?**

''குழந்தைகளின் புன்னகையை விட இந்த உலகில் கவர்ச்சியானது எதுவுமில்லை. குழந்தைகளை வைத்துப் பாட்டு எடுப்பதென முடிவானதும், நா.முத்துக்குமாரிடம் பால் வாசனை, ரோஜா கைகள், பின்னழகு என்று ஒரு நீண்ட பட்டியலைக் கொடுத்து, 'இந்த ஐட்டங்கள் எல்லாம் கண்டிப்பாகப் பாடலில் இடம்பெற வேண்டும்' என்று சொல்லிவிட்டேன். யுவனின் டியூனுக்கு எழுதப்பட்ட பாட்டில் அவர் அவ்வளவையும் புகுத்திவிட்டார்.

அந்தப் பாடலுக்கு ஏற்ப படம் பிடிக்க வேண்டுமென்பதற்காக குழந்தைகள் காப்பகங்களுக்குப் போய் பேசி, சம்மதம் பெற்றோம். தெரிந்த நண்பர்கள் வீட்டுக் குழந்தைகளைக் கொண்டு வந்தோம். ஆனால், குழந்தைகளைச் சிரிக்க வைப்பதற்குள் போதும் போதும் என்று ஆகிவிட்டது. சில குழந்தைகளைச் சிரிக்க வைக்க ஸ்கூல் டீச்சரைக்கூட வரவழைத்தோம். பிறந்து ஒரே வாரம் ஆன ஒரு குழந்தையை கூடப் படம் பிடித்திருக்கிறோம். நூறு புன்னகைகளுக்குப் பதிலாக ஆயிரம் அழுகைகளைக்கூட சுலபமாக எடுத்திருக்கலாம். குழந்தைகள் எல்லோருமாகச் சேர்ந்து என்னை பெண்டு நிமிர்த்திவிட்டார்கள்.''

**படத்தில் உங்களையே கவர்ந்ததாக நீங்கள் கருதும் காட்சி?**

''நித்தின் சத்யா, பத்மப்ரியாவை வீட்டுக்குள்ளேயே துரத்தித் துரத்தி அடிக்கும் காட்சி. நித்தின், பத்மப்ரியாவை அடிக்கிறாற்போல் ஒரு தடவைகூட காட்டவில்லை. ஆனால் அவரது அடியில் இவர் துடிப்பதை, கேமராவை வீட்டின் ஹாலில் ஒரே இடத்தில் நிலையாக வைத்திருந்தாலும், கேமராவே அதிருவதுபோலக் காட்டியிருப்பேன். அதே போல, க்ளைமாக்ஸ் காட்சியின்போது, சுமார் இருபது நிமிடங்கள் ஒரு வசனம்கூட கிடையாது. வெறும் பின்னணி இசையும் ஸ்பெஷல் எஃபெக்டும்தான்.

கொச்சின் நகரம் என்றாலே துறைமுகத்தில்தான் படம் பிடிப்பார்கள். ஆனால், நான் அங்கே உள்ள இருநூறு வருடப் பழைமையான கறுப்புப் பாலத்தை பிரத்யேக லென்ஸ் பயன்படுத்தி வேறு ஒரு புதிய பாலத்திலிருந்து படம் பிடித்திருக்கிறேன். மலையாளப் பட உலகினர் பலரும் இதைப் பாராட்டினார்கள். சத்தம் போடாதே படம், மலையாளத்தில் 'கேட்காத சப்தம்' என்ற பெயரில் வெளியாகப் போகிறது.''

– **கௌதம்ராம்**




ஸ்ரீரங்கப் பட்டணத்தில் ஹைதர் அலி, திப்பு சுல்தான் சமாதிகளைப் பார்த்து, 'ஒவ்வொருவரிடமிருந்தும் நாம் கற்றுக்கொள்ள வேண்டிய விஷயங்கள் அநேகம் இருக்கத்தான் செய்கின்றன. கோயில்களையும், மயானங்களையும் எப்படிச் சுத்தமாய் வைத்துக்கொள்ள வேண்டுமென்பதை முஸ்லிம்களிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டும். கோயிலாவது பாதகமில்லை. ஆனால் மயானச் சீர்திருத்தம் மிகவும் அவசியமானது. ஏனெனில் கோயிலுக்கு நாம் போகாமல் இருந்து விடலாம். ஆனால் நானும், நீங்களும் ஒரு நாள் கட்டாயம் மயானத்துக்குப் போயே ஆகவேண்டும் அல்லவா?' என்கிறார்.

மிகவும் குறிப்பிடத்தக்கது இலங்கைப் பயணக் கட்டுரைகள். ஒரு பயணக் கட்டுரை எப்படி அமைய வேண்டும் என்பதற்கு இலங்கையின் ஆழ, நீள, அகலங்களை முழுமையாக அளந்து, சொற்களில் சுவையேற்றி, வாசகரின் கண்முன் படம் படமாய் நிறுத்தி, ஒவ்வொருவரும் தாமே இலங்கையில் பயணிப்பது போன்ற அனுபவத்தை அடைய வைக்கும் அமரத்துவம் வாய்ந்தவை.

# சுகமாகச் சொல்லும் தந்திரம்!

'கல்விப் பயிற்சியின் உத்தம இலட்சியம் அறிவு வளர்ச்சியாயின், ஒருவன் தன் தாய்மொழியின் மூலமாகவன்றி எளிதாகக் கல்வி கற்க முடியாது' என்று ஐயத்துக்கு இடமின்றி அழுத்தம் திருத்தமாக எடுத்துரைக்கும் கல்கி, 'முதலைக் கண்ணீர் நிறைய ஸ்டாக் கிடைக்குமானால் சென்னையிலுள்ள அரசியல்வாதிகளிடம் நல்ல வியாபாரம் நடத்தலாம். அதிலும் சட்டசபைத் தேர்தல் நெருங்க நெருங்க அந்தச் சரக்குக்குக் கிராக்கி அதிகமாகி வருமல்லவா?' என்று நையாண்டி செய்கிறார். எதைச் சொன்னாலும் சுகமாகச் சொல்லும் தந்திரம் கல்கியின் எழுத்துக்குக் கிடைத்த வரம்.

'எதை எழுதுவது?' என்று இன்றைய தலைமுறை அதன் போக்கில் தீர்மானிக்கட்டும். ஆனால் ஒன்றை 'எப்படி எழுதுவது?' என்றறிய கல்கியின் எழுத்துக்களை ஒருமுறையாவது நாம் வாசிப்பது நல்லது.

ஷெல்லிக்குக் கவிதையைப் போல், கல்கிக்கு உரைநடை எவ்வளவு இயல்பாய் வசப்பட்டிருந்தது என்பதற்கு வளமான சான்று 'கல்கி வளர்த்த தமிழ்' புத்தகம்.

ஒரு படைப்பாளியைத் தனியாக இனம் பிரித்துக் காட்டுவது அவருடைய நடைதான். படைப்பிலக்கிய உலகில் கல்கியின் நடை அலாதியானது; அபூர்வமானது; யாருக்கும் எளிதில் கைவராதது. கண்ணுக்குத் தெரியாமல் மண்ணுக்குள் நகரும் நீரோட்டம்போல் கல்கியின் நடையில் நகைச்சுவை அடிநாதமாய் இழையோடும். அதுதான் அவருடைய பலம்.

– தமிழருவி மணியன்


● தமிழருவி மணியன்

கல்கி வளர்த்த தமிழ்
அமரர் கல்கி, விகடன் பிரசுரம், 757, அண்ணா சாலை, சென்னை - 2



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.

## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 18 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு, நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/ வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை ஸ்ரீ சாரதா சக்தி பீடம் என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர் நல்லாசியுடன்
நிர்வாகம்

அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை

# துருப்புச் சீட்டு!

அந்த ஆளைக் கண்டதும், முருகன் மனத்தில் ஒரு 'பல்ப்' எரிந்தது.

அவனா? அவனேதான்! எப்படி மறக்க முடியும் அந்த முகத்தை.

முத்து அண்ணன் சாலை ஓரத்தில் விழுந்து கிடக்க, அவர் ஓட்டி வந்த சைக்கிள் நசுங்கிப்போய் விழுந்து அருகில் இருக்க, பத்தடி தொலைவில் நின்ற காரிலிருந்து எட்டிப் பார்த்த முகம்!

இதே முகம்தான்!

"டேய்!" என்று முருகன் பதற்றத்துடன் குரல் கொடுத்தபடி, காரை நோக்கி ஓட, முகத்தில் புகையை ஊதிவிட்டு, விருட்டென ஓடி மறைந்தது அந்த கார்.

முத்து அண்ணன் காரில் அடிபட்டு விழுந்த அந்தக் காட்சியை எப்போது நினைத்தாலும், ஜில்லிட்டுப் போகும் அவன் மனம்.

மூன்று மாதங்களுக்கு முன் நடந்த விபத்து என்றாலும், காரிலிருந்து எட்டிப் பார்த்துவிட்டு, உடனே தலையை உள்ளே இழுத்துக்கொண்ட முகத்தை முருகனால் மறக்கவே முடியாது.

அன்று காரை ஓட்டி வந்தது இந்த ஆள்தான். மனிதத்தன்மையே இல்லாமல், கோழையாய் காரில் சட்டென பறந்து போனது இவன்தான்.

வெளியில் எங்கு போனாலும், அருகில், எதிரில் வருபவரின் முகத்தை உற்று உற்றுப் பார்த்து நடந்ததற்கு, இன்று பலன் கிடைத்துவிட்டது. கடந்த மூன்று மாதத் தேடலுக்குப் பலன், இதோ எதிரில்.

முருகன் வேலை செய்வது பெரிய தொரு ஜவுளிக் கடையில். முத்து அண்ணனும் இங்குதான் வேலை பார்த்து வந்தார். முத்துதான் இவனை இந்தக் கடையில் வேலைக்குச் சேர்த்துவிட்டு, வேலையின் நெளிவு, சுளிவுகளைக் கற்றுத் தந்தது.

'எல்லாரையும் அக்கா, அம்மான்னே கூப்பிடு. பொம்பளைங்கதான் பெரும் பாலும் துணிகளைத் தேர்வு செய்வாங்க. அவங்க கண்ணை மட்டும் பார்த்துப் பேசணும்' என்று உபயோகமான அறிவுரைகளை சொல்லித் தந்த குரு அவர்தான், முருகனுக்கு.

விபத்தினால் முதுகில் பலத்த அடி பட்டு, படுத்த படுக்கையாய் இருக்கும் முத்து அண்ணனின் நிலை பரிதாபமானது என்றால், அவரின் வருமானத்தை நம்பி வாழ்ந்த அவர் குடும்ப நிலை மேலும் இரக்கத்தை வரவழைக்கக் கூடியது.

முருகன் அந்த ஆளை நோட்டமிட்டான். கசங்காத உடை, நடுத்தர வயதிலும் முகத்தில் பணக்கார மினுமினுப்பு, பர்சிலிருந்து பணத்தை எடுத்தபோது தெரிந்த செல்வக் கொழுப்பு.

முதலாளியின் பார்வையில் படும்படி நின்றுகொண்டான் முருகன்.

"டேய் தம்பி, இந்த பைகளை எல்லாம் சாரோட காரில் கொண்டு போய் வை."

முருகன் ஓடிப்போய் பைகளைத் தூக்கிக் கொண்டான்.

அந்த ஆள் அலட்டல் நடையில் முன்னே நடக்க, முருகனும் தொடர்ந்தான்.

காரின் பின்புறக் கதவை அந்த ஆள் திறந்துவிட, முருகன் பைகளைப் பின் இருக்கையில் வைத்தான்.

'தேங்க்ஸ்' என்றபடி காரில் அமர்ந்து, அவன் ஓட்டிச் செல்வதையே பார்த்தபடி




# கிருஷ்ணா

நின்றான் முருகன்.

இதே கார்தான். முத்து அண்ணனை இடித்துத் தள்ளிவிட்டுப் போனது.

காரின் நம்பர் அவனுக்குள் நன்றாய் பதிந்து போனது.

காரின் நம்பரை வைத்து, ஆர்.டி.ஓ. அலுவலகத்தில் பியூனாயிருக்கும் நண்பன் மூலம், அந்த ஆளின் விலாசத்தை வாங்கினான். விலாசத்தை வைத்து தொலைபேசி எண்ணைக் கண்டுபிடிப்பது பிரமாத காரியமாய் இல்லை முருகனுக்கு.

பப்ளிக் டெலிபோன் பூத்துக்குள் புகுந்து, நம்பரை டயல் செய்தான். மனசுக்குள் படபடப்பாயிருந்தது முருகனுக்கு.

''ஹலோ'' என்றது பெண் குரல்.

''நான்...'' என்று திணறினான்.

''மிஸ்டர் இராதாகிருஷ்ணன் இருக்காரா?'' சமாளித்துக்கொண்டு கேட்டான்.

''அவர் வெளியே போயிருக்காரு. நீங்க யாரு?''

''நான்... நாங்க கார்... மெக்கானிக் கடையிலேர்ந்து பேசறோம்.''

சட்டெனத் தோன்றிய பொய்யைக் கூறினான்.

''சாரை வேற எந்த நம்பர்லே பிடிக்கலாம்.''

''அவரோட செல்லில் பேசுங்களேன்'' என்று அந்தப் பெண் நம்பரைக் கூறினாள்.

முருகனுக்கு சந்தோஷமாயிருந்தது. இனி இராதாகிருஷ்ணனுடன் பேசலாம்.

செல் நம்பரில் அழைத்தான்.

''ஹலோ'' என்றது குரல்.



## “ஒரு லட்ச ரூபா போதுமா? நான் செஞ்ச தப்பு சரியாயிடுமா?”

''மிஸ்டர் இராதாகிருஷ்ணன், என்னை உங்களுக்குத் தெரியாது. ஆனால், உங்களை எனக்குத் தெரியும். அதுவும் ஒரு குற்றவாளியாய்.''

ஒத்திகை பார்த்து வைத்திருந்த டயலாக்கை எடுத்துவிட்டான் முருகன்.

''ஹலோ... யாரு...யாரு குற்றவாளி?''

''மூன்று மாதம் முன்னாடி, ஜி.எஸ்.டி. ரோட்டுல ஒரு சைக்கிள் மேலே மோதிட்டு, கோழைத்தனமாய் காரில் ஓடிபோன உங்களைக் குற்றவாளின்னு தானே சொல்லணும்.''

ஒரு நிமிடம் எதிர்முனையிலிருந்து பதிலே இல்லை.

''நீ... நீங்க யாரு? போலீசா?''

''இல்லை.''

''இதோ பாருங்க, நான் யார் மேலேயும் காரை மோதலை. சும்மா பூச்சாண்டி காட்டாதே.''

சுதாரித்துக் கொண்டவனாய் அந்த இராதாகிருஷ்ணன் பேசவும், முருகன் போனை வைத்துவிட்டான்.

ஒரு மணி நேரம் கழித்து மீண்டும் போன் செய்தான்.

''மிஸ்டர் இராதாகிருஷ்ணன், மறுபடியும் நான்தான். விபத்துப் பற்றி ஞாபகம் வந்ததா?''

''அதான் சொல்லிட்டேனே''

''உங்களை ஒப்புக்கொள்ள வைக்க என்னிடம் ஒரு துருப்புச் சீட்டு இருக்கு.''

''என்ன... என்ன அது? நீ யாரு?''

''யாரும் உங்களைப் பிடிக்க முடியாதுன்னுதானே சைக்கிள் மேலே மோதிட்டு ஓடிட்டீங்க?''

''உனக்கு என்ன வேணும், பணமா?''

முருகன் போனை வைத்துவிட்டு, பப்ளிக் டெலிபோன் பூத்திலிருந்து வெளியே வந்தான்.

ஆள் ஒப்புக்கொண்டு விட்டான். அடுத்து என்ன செய்வது என்று யோசித்தான்.

முத்துவின் மனைவியுடன் பேசிக் கொண்டிருந்தான் முருகன்.

''இதோ பாருங்க அண்ணி, நம்ம அண்ணன் கஷ்டத்தை எடுத்துச் சொல்லி, பண உதவிக் கேட்டிருக்கேன் ஒருவரிடம். இன்னும் அரைமணி கழிச்சு, அவரைக் கூட்டிட்டு வருவேன்'' என்றுவிட்டுப் புறப்பட்டான்.

சரியாகப் பத்து மணிக்கு அந்தப் பகுதியின் தெருமுனைக்கு இராதாகிருஷ்ணனை போனில் வரச் சொல்லியிருந்தான் முருகன்.

''உன்னிடம் துருப்புச் சீட்டு ஏதோ இருக்குன்னியே! அதைக் காட்டு. அப்புறம் நான் எவ்வளவு பணம் தர்றதுன்னு முடிவு பண்ணலாம்'' என்று இராதாகிருஷ்ணன் பிஸினஸ் பேசினார், போனில்.

அதற்குத்தான் நேரில் அழைத்திருந்தான் அவரை.

தெரு முனையில் காத்திருந்தான், மறைவாய். இராதாகிருஷ்ணனின் கார் வரவும், நிதானித்தான். அவர் தனியாளாய் இறங்கி வரவும், முன்னே நடந்தான்.

''சார், என் பெயர் முருகன். உங்களிடம் போனில் பேசியது நான்தான்.''

இராதாகிருஷ்ணன் அவனை கண்களால் அளந்தார். பிசினஸ்தனம் அவர் உணர்வுகளில் வெளிப்பட்டது.

''எங்கே அந்தத் துருப்புச்சீட்டு?''

''வாங்க சார்! முதலில் உங்களுக்கு ஒரு காட்சியைக் காண்பிக்கிறேன்'' என்று முத்து அண்ணன் வீட்டுக்குக் கூட்டிச் சென்றான்.

கார் நுழைய முடியாத சிறிய சந்து என்பதால், நடந்தே சென்றனர்.

முத்து அண்ணன் படுத்திருந்த கட்டிலருகே அவரை அழைத்துச் சென்றான்.

''இவர் பெயர் முத்து சார். முதுகுத் தண்டிலே அடிபட்டதினாலே, படுத்த

படுக்கையாய் இருக்கார். என்கூட ஜவுளிக் கடையிலே சேல்ஸ்மேனாய் இருந்தார். மூன்று மாதமாய் மருத்துவச் செலவுக்கும் பணமில்லாமல், சம்பளமும் இல்லாமல் குடும்பமே அல்லாடுது. அறுவை சிகிச்சை செய்தால் மட்டுமே, முத்து அண்ணனால் எழுந்து நடமாட முடியும்னு டாக்டர் சொல்லிட்டாரு. அதுக்கு ஐம்பதாயிரம் ரூபாய் செலவாகுமாம். இவரோட, இந்தக் குடும்பத்தோட பரிதாபமான நிலைக்குக் காரணம், இவர் போன சைக்கிள் மேலே ஒரு கார் மோதினதுதான்.''

முருகன் உருக்கமான குரலில் நிதான மாய்ச் சொல்ல, இராதாகிருஷ்ணனின் பார்வை, முத்து அண்ணன் மேலே நிலை கொண்டிருந்தது.

''வாங்க சார், போகலாம்'' என்று அவரை வெளியே கூட்டி வந்தான்.

கார் அருகில் வரும் வரை இருவரும் மௌனமாகவே நடந்து வந்தனர்.

''என்னாலதான் அவர் இப்படி அடி பட்டுக் கிடக்காருன்னு...''

''நான் யாரிடமும் சொல்லலே சார்.''

இராதாகிருஷ்ணன் தலைகுனிந்தபடி நின்றார்.

''ஸாரி முருகன். உங்க முத்து அண்ணன் நிலைமை யாருக்கும் வரக்கூடாது.''

இராதாகிருஷ்ணன் குற்ற உணர்வில் தவிப்பது புரிய, அமைதியாய் நின்றான்.

''நான் என்னப்பா செய்யணும், இப்ப?''

முருகன் அவர் கைகளைப் பற்றிக் கொண்டான்.

''எனக்கு எதுவும் வேண்டாம் சார். முத்து அண்ணனையும், அவர் குடும்பத்தையும் காப்பாத்துங்க சார்.''

''ஒரு லட்ச ரூபாய் போதுமா? நான் செஞ்ச தப்பு சரியாயிடுமா? உன் முத்து அண்ணன் குணமாயிடுவாரா?''

முருகன் அவரை கையெடுத்துக் கும்பிட்டான்.

அன்றே முத்து அண்ணனை ஆஸ்பத்திரியில் சேர்த்தான். ஆஸ்பத்திரி செலவைத் தாமே ஏற்பதாக டாக்டரிடம் சொல்லிவிட்டார் இராதாகிருஷ்ணன்.

ஆஸ்பத்திரியை விட்டுக் கிளம்பும் போது, இராதாகிருஷ்ணன் கேட்டார்.

''முருகன், என்னை மடக்க ஏதோ துருப்புச் சீட்டு இருக்குன்னியே, அது என்னன்னு இனிமேலாவது என்னிடம் காட்டக் கூடாதா?''

முருகன் புன்னகையுடன் சொன்னான்.

''மனிதர்களின் மனதின் உள்ளே இருக்கும் இரக்க சுபாவம்தான் என் துருப்புச் சீட்டு சார். உங்களை முத்து அண்ணன் வீட்டுக்குக் கூட்டிட்டுப் போனபோது, நீங்க பிசினஸ்மேனாய் இருந்தீங்க. முத்து அண்ணன் நிலைமையைப் பார்த்ததும், மனிதனாயிட்டீங்க. அதனாலதான் உடனே உதவியும் செஞ்சீங்க. வேற எந்த ஆதாரமும் என்னிடம் இல்லை சார்.'' ●

## உங்கள் விருப்பம்

# 'தூறல்' கவிதைகள்!

தேவை

தூறல் போன்று சிலிர்க்க வைக்கும் புதுக் கவிதைகள்! காதல், வீரம், சுகம், சோகம் எப்படியும் இருக்கலாம்! ஐந்து அல்லது ஆறு வரிகளைத் தாண்டக் கூடாது. போஸ்ட் கார்டில் மட்டுமே. ஒரு கார்டில் ஒரு கவிதை போதும். 'தூறல் கவிதைகள்' என மறக்காமல் குறிப்பிடுங்கள்! தேர்வாகும் கவிதைகளுக்குச் சன்மானம் உண்டு.



# பரவச நிலை!

தத்துவங்கள் சொன்னார். முதல் மூன்று ஆழ்வார்களும் அன்பையும் வையத்தையும் திரியாக வைத்து விளக்கேற்றி பகவானின் பொன்மேனியைக் கண்டனர். திரு மங்கை ஆழ்வார் தமிழ்ப் புலமை யால் பிரமிக்க வைத்தார். இப் படி ஒவ்வொருவரும் தமக்கே உரிய தனிச் சிறப்புகள் கொண் டிருந்தாலும் நம்மாழ்வாரின் திரு வாய்மொழியை இதற்கெல்லாம் மகுடம்போல, சிகரம்போலச் சொல்லலாம். திருவாய்மொழி யிலேயே மிகச் சிறந்த பாசு ரத்தை நம்மாழ்வார் அதன் கடைசியில் வைத்திருக்கிறார்.

'சூழ்ந்து, அகன்று, ஆழ்ந்து,
உயர்ந்த முடிவில் பெரும்
பாழேயோ!
சூழ்ந்து, அதனில் பெரிய பர
நல் மலர்ச் சோதீயோ
சூழ்ந்து, அதனில் பெரிய சுடர்
ஞான இன்பமேயோ!
சூழ்ந்து, அதனில் பெரிய
என் அவா அறச் சூழ்ந்தாயே!'

முடிவிலாத இறைவனை வார்த்தை களில் நமக்கெல்லாம் விவரிக்கப் பற்பல ஜாலங்கள் செய்கிறார் ஆழ்வார். சுற்றிலும் பரவி அகலம், ஆழம், உயரம், முடிவற்ற தன்மைகொண்ட பெரும் பாழோ! நீ அதை விடப் பெரிய ஜோதியா? அதனினும் பெரிய சுடர்ஞான இன்பமா? அதைவிடவும் பெரிசான என் ஆசையெல்லாம் தணியும் படி என்னை ஆக்ரமித்துக் கொண்டாயே!

பரவச நிலை என்பதை இதை மிஞ் சும்படி யாரால் சொல்ல முடியும்?

(நிறைந்தது)

பிரபந்தத்தின் மிகச் சிறந்த பாசுரம் எது என்று என்னைப் பலர் கேட்பார் கள். ஒவ்வொரு ஆழ்வாருக் கும் ஒரு சிறப்பு உண்டு. பெரியாழ்வார் பிள்ளைத் தமிழ் செய்தார்; ஆண்டாள் காதலித்தார்; தொண்டரடிப் பொடி பக்தியில் உருகிப் போனார்; குல சேகரர் இராமரைச் சிலாகித்தார்; திருப் பாணாழ்வார் 'அமலன் ஆதிபிரானை'க் கண்ட கண்கள் மற்றொன்றைக் காணாது என்றார்; திருமழிசை துடிப்பான சந்தத்தில்

**வாரம் ஒரு பாசுரம்**

**சுஜாதா 51**

# நெருக்கமாய் வந்த நெருக்கம்!

அருகருகே அமர்ந்து
தோள் சாய்ந்து
தொடுவானம் பார்த்தபடி
பேசிக் கொண்டிருப்போம்
நெடுநேரம்

பேச்சினூடே கைவிரல்கள்
அனிச்சையாய்ப் பிணைந்திருக்கும்
பற்றிய விரல்களில்
சொடுக்கெடுத்தபடி
கவிதை மொழிந்த காலங்கள் உண்டு

இப்போதும் வாய்க்கின்றன
அத்தகைய தருணங்கள் என்றாலும்
பேசத் துவங்கும் முன்னரே
வந்தமர்கின்றனர் பிள்ளைகள்
நம்மிருவருக்கும் இடையில்

கண்கள் விரிய
அவர்கள் உரைக்கும்
மாயக் கதைகளில் சிக்குண்டு
பேச்சிழக்கிறோம் யசோதரையாய்

கண்ணளவிலேயே நின்றுவிடுகின்றன
நம் காதல் மொழிகள்
தொடுதல்கள் இல்லை
ஆனாலும் உணர்கிறோம்
முன்பைவிட இன்னும் நெருக்கமாய்



■ மீ.உமாமகேஸ்வரி

# மீடியா

## உள்ளும் புறமும்...

"உங்கள் மீது எந்தத் தவறும் இல்லை, நீங்கள் நிரபராதி என்று நீதிமன்றம் தீர்ப் பளித்திருக்கிறது. இப்போது நீங்கள் எப்படி உணர்கிறீர்கள்?" அந்த என்.டி.டி.வி. யுவதி, உமா குரானாவிடம் ஒய்யாரமாகக் கேட்ட கேள்வி இது. சிறையிலிருந்து விடுதலை யான பிறகு, உமாவிடம் கேட்கப்பட்ட முதல் கேள்வியும் இதுதான். ஆனால், உமா குரானாவால் இதற்குத் தெளிவான ஒரு பதிலைச் சொல்ல முடியவில்லை.

எப்படி முடியும்? முந்தாநாள் வரை, தானுண்டு தன் வகுப்புகள் உண்டு என்று இருந்தவர் மீது அநாயாசமாக ஒரு குற்றச் சாட்டைச் சுமத்தி உள்ளே தள்ளியிருக்கிறார் கள். அதிலும் இலேசுபட்ட குற்றச்சாட்டா? தன்னிடம் பயிலும் மாணவிகளைக் கட்டா யப்படுத்திப் பாலியல் தொழிலில் ஈடு படுத்துகிறாராம்.

மீடியா உலகின் தற்போதைய ஃபேஷன் ஸ்டிங் ஆபரேஷன் (Sting operation). நினை விருக்கிறதல்லவா? ஆயுத பேர ஊழலில் பெட்டிப் பெட்டியாக பணம் வாங்கிக் கையும் களவுமாகப் பிடிபட்டார் அந்த பி.ஜே.பி. தலைவர். சட்டசபையில் கேள்விக் கேட்பதற்காகப் பணம் வாங்கிக்கொண்ட அந்தப் பதினொரு எம்.பி. சீடர்கள் அவ மானச் சின்னங்களாக மாறினார்கள்.

உமாவையும் அப்படியொரு ஆபரேஷ னில்தான் மடக்கியிருக்கிறார்கள். உமா தன் மாணவிகளுடன் பேசும்போது (அதாவது அவர்கள் கூற்றுப்படி பலவந்தப்படுத்திக் கொண்டிருந்தபோது) இரகசியமாகச் சில வீடியோ காட்சிகளைப் பதிவு செய்திருக் கிறார்கள். பின், அந்தப் பதிவுகளையே சாட்சியங்களாகச் சமர்ப்பித்திருக்கிறார்கள்.

விஷயம் தெரிய வந்ததும் சம்பந்தப் பட்ட பள்ளி உமாவை நிர்தாட்சண்யமாக வேலையிலிருந்து தூக்கியிருக்கிறது. மாண வர்களும் பெற்றோர்களும் 'கொடுமைக்காரி உமா ஒழிக' என்று பள்ளி வாசலில் நின்று கோஷம் போட்டிருக்கிறார்கள். 'எங்கள் குலத்துப் பெண்களை எப்படிச் சீரழிப்பாய்' என்று சில மாணவ ஹீரோக்கள் உமா மீது பாய்ந்திருக்கிறார்கள். அவர் கையைப் பிடித்து இழுத்து வந்து சாலையில் வைத்து நையப் புடைத்திருக்கிறார்கள். ஒட்டுமொத்த டெல்லி நகரமும் கொந்தளித்திருக்கிறது. உமா கைது செய்யப்பட்டு பத்து நாட்கள் சிறையில் அடைக்கப்பட்டிருக்கிறார்.

எல்லாம் முடிந்த பிறகு நீதிமன்றத் தீர்ப்பு வந்திருக்கிறது. இது போலியாக ஜோடிக்கப் பட்ட வழக்கு; உமா நல்லவர். பிறகு, என்.டி.டி.வி. பேட்டி. 'எப்படி உணர்கிறீர் கள் உமா மேடம்? நலம், நலமறிய அவா.'

'அந்த ரிப்போர்ட்டரின் பெயர் பிர காஷ் சிங். லைவ் இந்தியா நியூஸ் சானல் என்னும்' நிறுவனத்தில் பணிபுரிபவர்.

# என்னும் தேள்!

தனிப்பட்ட பிரச்னை காரணமாக, உமா மீது வஞ்சம் தீர்த்துக் கொண்டிருக்கிறார் ஒரு பிஸினஸ் மேன். அவர்களுக்கென்ன போச்சு? சூப்பர் மேட்டர். பரபரப்புக்குப் பரபரப்பு; விளம்பரத்துக்கு விளம்பரம். பிறகு, எக்கச்சக்க பணம். உமா குரானாவின் அந்தரங்க நிகழ்ச்சியின் இப்பகுதியை உங்களுக்கு வழங்குபவர்கள் ஸோ அண்டு ஸோ. இருபத்து நான்கு மணி நேரமும் ஒளிபரப்பியிருக்கிறார்கள். இடையிடையே விவாதங்கள், நேரடிக் கள ஆய்வுகள். எக்கச்சக்க பேட்டிகள். பெண்களின் பாதுகாப்புப் பற்றி, ஆசிரியர்களின் கடமை பற்றி, சீரழிந்து வரும் கலாசாரம் பற்றி. டி.ஆர்.பி. ரேட்டிங் உச்சத்துக்குப் போயிருக்கிறது.

உமா நல்லவர் எனத் தீர்ப்பு வந்துவிட்டது. இப்போது இந்த நியூஸ் சானல் என்ன செய்யப்போகிறது? மீண்டும் ஒரு இருபத்து நான்கு மணி நேர ஒளிபரப்பு? மீண்டும் ஒரு ஸ்டிங் ஆபரேஷன்? உமா எத்தனை நல்லவர், அவர் எவ்வளவு பண்பானவர் என்பதற்கான வீடியோ ஆதார ஒளிபரப்பு? இந்த நிகழ்ச்சிக்கு யாராவது விளம்பரம் தருவார்களா? இப்பகுதியை உங்களுக்கு வழங்குபவர்கள் ஸோ அண்டு ஸோ?

மாட்டார்கள். ஒருவர் நல்லவர் என்பது நியூஸ் ஆகாது. இந்த நிகழ்ச்சிக்கு டி.ஆர்.பி. ரேட்டிங் கிடைக்காது. யாரும் பார்க்க மாட்டார்கள். காரமான சர்ச்சைகள் வேண்டும்; பார்ப்பவர்கள் ஆச்சரியப்பட வேண்டும் அல்லது ஆத்திரப்பட வேண்டும் அல்லது அதிர்ச்சியடைய வேண்டும். டீ.வி. பார்க்கும் அந்த வீடே, அந்தத் தெருவே, அந்த நகரமே பற்றி எரிய வேண்டும்.

சாமியார் மேட்டரா? சூப்பர். பாலியல் வக்ரங்களா? எங்கே, எங்கே? உடனே கவர் செய். கோரமான விபத்தா? புகைப்படங்கள் நிச்சயம் வேண்டும் கலரில்! நடிகர் - நடிகைகள் பற்றிய கிசுகிசுவா? இங்கே கொண்டா. அரசியல்வாதிகள் ஒருவரை ஒருவர் திட்டிக் கொள்கிறார்களா? அட்சரம் பிசகாமல் அப்படியே எழுதிக் கொடு. யாருடைய அந்தரங்கத்தையாவது இரகசியமாகத் தெரிந்து கொள்ள முடியுமா? ஃபோட்டோ எடுக்க முடியுமா? வீடியோ? அதுபோதும்.

வேறு வழியில்லை என்கிறார்கள் மீடியா ஆட்கள். தினம் ஒரு சானல் முளைத்துக் கொண்டிருக்கிறது. எத்தனை மெகா சீரியல்களைத்தான் எடுப்பது? கற்பனை வக்ரங்களைப் பார்த்துப் பார்த்து மக்களுக்குப் போரடித்துவிட்டது. அவர்களைக் கவர்ந்திழுக்க வேண்டாமா? சீட்டின் நுனிக்கு அவர்களைக் கொண்டுவர வேண்டாமா? தவிரவும், எங்கள் போட்டியாளர்களை முந்தி நாங்கள் முன்னேற வேண்டாமா? நம்பர் ஒன் டீ.வி. சானல் என்னும் பெயர் வரவேண்டுமென்றால் சும்மாவா?

உமா குரானா மீண்டும் வேலைக்குப் போகிறார். வீடியோ எடுத்த அந்த ரிப்போர்ட்டர் கைது செய்யப்பட்டுள்ளார். நியூஸ் சானல் தற்போதைக்கு நிறுத்தி வைக்கப் பட்டிருக்கிறது. அவ்வளவுதான்.

ஓர் அத்தியாவசியமான பின்குறிப்பு. ஸ்டிங் என்றால் கொடுக்கு. தேளும், மீடியாவும் கொடுக்கைப் பயன்படுத்துகின்றன. ஆனால், தேள் காசு வாங்கிக்கொண்டு பிறரைக் கொட்டுவதில்லை. அதுதான் இரண்டுக்கும் உள்ள வித்தியாசம். ●



* உமா குரானா

**மருதன்**

# இரகசிய ஒலியின்

'பார்த்திபன் கனவு' வர்ணனைப் போட்டியில் நூற்றுக் கணக்கானோர் கலந்து கொண்டனர். பரிசுக் குரிய வர்ணனைகளைத் தேர்ந்தெடுப்பது சவாலா கவே இருந்தது. இதோ பரிசு பெறும் ஐந்து வர்ணனைகள் :

எல்லையில் காவல் காக்கும் போர் வீரர்களைப்போல வரிசையாய் நின்று கொண்டிருந்த மரங்களுக்கு, மேகங்களிலி ருந்து வழிந்த பனிப்போர்வை கருணை யுடன் தலைதுவட்டிக் கொண்டிருந்தது. அந்தத் தடாகத்தில் கண்ணுக்கெட்டிய தூரம் வரை பச்சை இலைகள் பாய் விரித் திருக்க, இடை இடையே மலர்ந்து நின்ற தாமரைப் பூக்கள் கன்னிப் பெண்களைப் போல தலை நிமிர்ந்தும், குனிந்தும் புன்னகை சிந்திக் கொண்டிருந்தன.

அந்த ஏரியின் மேற்பரப்பைப் பார்த்த போது இது காலையா, மாலையா? என்ற சந்தேகம் தோன்றியது. காதலன் தன் காதலி யின் அழகை யாரும் பார்த்துவிடக் கூடாது என்று மறைப்பதுபோல, படர்ந்து விரிந்த இலைகளும் பூக்களும் ஏரியின் அழகை முழுவதுமாக மறைத்துக் கொண்டிருந்தது போதாதென்று, சுற்றி நின்ற மரங்களும் தங்கள் பங்குக்குக் கை கோத்துக்கொண்டு அந்தக் காதலனும் காதலியும் விளையாடும் விளையாட்டைப் பார்த்து இரசித்து தலை யாட்டிக் கொண்டிருந்தன.

- அனார்கலி,
தஞ்சாவூர்

அழகான தாமரைத் தடாகம். தாமரை குளத்துக்குக் கரையாக இயற்கை அன்னை தன் பசுந்தோகையை விரித்து மலையாக நிற்கிறாள். குளத்தில் செழுமையான பச்சை நிற அகன்ற இலைகளுக்கு அடியில் யார் கண்ணிலும் படாமல் பல வண்ண மீன்கள் சுதந்திரமாகத் துள்ளி விளையாடும்போது தெறிக்கும் தண்ணீர், இலைகள் மேல் துளிகளாக உருண்டு நிற்கின்றன. பச்சை கம்பளத்தில் அவை முத்துக்கள் பதித்தாற் போல் மிளிர்கின்றன. செந்தாமரைகள் கதிரவன் வரவை எதிர்நோக்கி ஆவலுடன் குளத்திலிருந்து எட்டிப் பார்க்கின்றன. இதோ! கதிரவன் தன் தாமரை மனை யாளை அணைக்க தன் பொற்கரங்களை நீட்டி, பசுமையான மலையைத் தங்க வண்ணமயமாக்கிக்கொண்டு வந்துவிட் டான். கதிரவன் தாமரையை அணைக்கப் போகும் காட்சியைக் காண வெட்கப்பட் டுக் கொண்டு, இலைகள் மேல் இருந்த முத்துக்கள் மறைந்துவிட்டன.

- லெக்ஷ்மி ஸந்தானம்,
ஸ்ரீரங்கம்

'கிங்கிணி வாய்ச் செய்த தாமரைப் பூப்போல செங்கண் சிறுகறிதே எம் மேல் விழியாவோ' என்று பாடிய ஆண்டாளின் வைர வார்த்தைகளை அறிந்திருந்தன போலும் புள்ளினங்கள். ஓயாமல் பாடி ஒலியெழுப்பி, இயற்கையின் அன்றைய வரவுக்குக் கட்டியம் கூறி உலகை எழுப்பிக் கொண்டிருந்தன. காலைக் கதிரொளியைக் காதலித்துக் கைப்பிடிக்க எண்ணிக் காத் திருந்த காரிருள் என்னும் காரிகை, இன்றும் நம் எண்ணம் ஈடேறவில்லையே என்று ஏக்கத்துடன் மறையத் தொடங்கினாள். பனிப்பொழிவின் அழுத்தமான அணைப் பில் உறங்கிக்கொண்டிருந்த மலைகளைக் கால் வருடி மெதுவாக எழுப்பியது காலைத் தென்றல். வேண்டாம் என்று தலையாட்டித் தடுத்தன மரங்கள். பிறந்த குழந்தையின்

## கனவின் நுழைவாயில்

# சப்தம் தாங்காமல்...



## அமரர் கல்கியின் புத்தகம் பரிசு பெறும் வர்ணனைகள்...

செம்பஞ்சுப் பாதம் போல் சிவந்து மலர்ந்து ஆடிய தாமரைகள் வினைமுடித்து மீளும் தலைவனின் வருகைக்காகக் காத்திருக்கும் காதலிபோல் காத்திருந்தன. இப்படிச் சொன்னால்... 'ஒருவனுக்கு ஒருத்தி' என்ற கற்பு நெறிக்குப் பங்கமல்லவா? கதிரவன் ஒருவன். ஆனால் பங்கயங்கள் பல அல்லவா? வேண்டாம். இப்படிச் சொல்லலாம் : வள்ளலின் முகம் காணக் காத்திருக்கும் ஏழைகள்போல்... எனலாமா? ஏழையின் முகத்தில் மலர்ச்சியிருக்காதே... தாமரைகளின் மலர்ச்சி மகிழ்ச்சிப் பிரவாகமல்லவா! ஆம்; அதுதான் சரி. ஆயர்பாடியின் ஆசை நாயகனான கிருஷ்ணனின் வரவுக்காகக் காத்திருக்கும் கோபிகையர் எனலாம். அந்தக் கமல முகங்களில்தான் காதலும் இல்லை. காமமும் இல்லை. தத்துவார்த்தமான அமைதியும் பக்தியும் இருக்கும். கடைத்தேற்ற வரும் கடவுளின் முன் நிற்கும் மாதவ ஞானியர்போல் தடாகத்தில் காத்திருந்தன தாமரைகள்.

**- சு.மோகன்,**
**சிதம்பரம்**

"குளமெங்கும் தாமரைப் பூக்களின் ஆதிக்கம். தண்ணீரின் மேற்பரப்பைக் காண முடியாத படிக்கு அவை அடர்த்தியாகக் கோலமிட்டிருந்தன. பச்சையாடை உடுத்திய பருவ மங்கைகள்போல, செடிகளிலே பூத்திருந்த அந்தச் செந்தாமரை மலர்கள் பனியில் குளித்துவிட்டுத் தலை துவட்டிக் கொண்டிருந்தன. சில மொட்டுகள் இன்னும் விரிந்திடாமல் சோம்பல்பட்டன.

தாமரை இலைகள் ஆதவனின் முகம் பார்த்துக் கிடந்தன. அவற்றின் வட்ட வடிவ அழகினைப் பார்க்கும்போது நூற்றுக் கணக்கான பச்சை நிற அம்புலிகள் குளத்திலே மிதப்பது போன்ற பிரமை உண்டாகிறது.

குளத்தின் கரையோரமாக நெடுநெடுவென வளர்ந்திருந்த மரங்கள் சாகாக்கலை பயின்ற சித்தர் கூட்டம் சடா முடியோடு அமர்ந்திருப்பது போன்ற தோற்றத்தை அளித்தன.

தூரத்தே தெரிந்த சில வீடுகள் மூடு பனியின் பின்னணியில் அமானுஷ்யம் கலந்த பயத்தை நெஞ்சிலே விதைத்தன...

**- இதயா ஏகராஜ்,**
**கல்லக்குடி**

## 9. தந்தையும் மகளும்

குந்தவி தாயில்லாப் பெண். அவளுடைய அன்னையும் பாண்டிய ராஜகுமாரியும் நரசிம்மவர்மரின் பட்ட மகிஷியுமான வானமாதேவி, குந்தவி ஏழு வயதுக் குழந்தையாயிருந்தபோதே சுவர்க்கமடைந்தாள்.

இந்தத் துக்கத்தை அவள் அதிகமாக அறியாதவண்ணம் சில காலம் சிவகாமி அம்மை அவளைச் செல்லமாய் வளர்த்து வந்தாள். இந்த சிவகாமி தேவி பிரசித்தி பெற்ற ஆயனச் சிற்பியின் மகள். நரசிம்மவர்மரால் வாதாபியிலிருந்து சிறை மீட்டு வரப்பட்டவள். பட்டமகிஷியின் மரணத்துக்குப் பிறகு நரசிம்மவர்மர் சிவகாமியை மணம் புரிந்து கொள்வாரென்று சில காலம் பேச்சாயிருந்தது. ஆனால் அவ்விதம் ஒன்றும் நடக்கவில்லை. சில வருஷ காலத்துக்கெல்லாம் சிவகாமிதேவியும் சுவர்க்கம் புகுந்து விட்டாள்.

பிறகு, சக்கரவர்த்தியே குந்தவிக்குத் தாயும் தகப்பனுமாயிருந்து அவளை வளர்க்க வேண்டியதாயிற்று. அந்தப் புரத்தில் குந்தவிக்கு பாட்டிமார்கள் - மகேந்திரவர்மருடைய பத்தினிகள் சிலர் இருந்தனர். ஆனால் அவர்களுக்கும் குந்தவிக்கும் அவ்வளவாக மனப்பொருத்தம் ஏற்படவில்லை. குந்தவியின் தாயாரைக் குறித்து, 'தெற்கத்தியாள்' என்று அவர்கள் குறை கூறியதையும், சிவகாமி தேவியைப் பலவிதமாக நிந்தை செய்ததையும் குந்தவி குழந்தைப் பருவத்தில் கேட்டிருந்தாள். இதனாலேயே பாட்டிமார்களிடத்தில் அவளுக்குப் பற்றுதல் உண்டாகவில்லை. குந்தவியின் நடை உடை பாவனைகளும், அவள் எதேச்சையாகச் செய்த காரியங்களும் அந்தப் பாட்டிமார்களுக்குப் பிடிக்கவில்லை. நரசிம்மவர்மர் இந்தப் பெண்ணுக்கு ரொம்பவும் இடங்கொடுத்துக் கெடுத்து வருகிறார் என்ற குறையும் அவர்களுக்கு உண்டு.

இக்காரணங்களினால் குந்தவிக்குத் தன் தந்தையிடமுள்ள இயற்கையான பாசம் பன்மடங்கு வளர்ந்திருந்தது. அப்பாவுடன் இருக்கும்போதுதான் அவளுக்குக் குதூகலம்; அவருடன் வார்த்தையாடுவதில் தான் அவளுக்கு உற்சாகம். அவருடன் சண்டை பிடிப்பதில்தான் அவளுக்கு ஆனந்தம். அவர் தன்னை உடன் அழைத்துப் போகாமல் ராஜரீகக் காரியங்களுக்காக வெளியூர்களுக்குப் போயிருந்தால், அவளுக்கு ஒருநாள் போவது ஒரு யுகம் போவது போலிருக்கும்.

சக்கரவர்த்திக்கோ என்றால், ஏன்? அவருடைய பிராணனே குந்தவியாக உருக்கொண்டு வெளியில் நடமாடுகிறது என்று கருதும்படி இருந்தது. அவருடைய விசால இருதயமானது ஒரானொரு காரணத்தினால் பல ஆண்டு காலம் வறண்டு பசையற்றுப் பாலைவனமாயிருந்தது. அப்படிப்பட்ட இருதயத்தில் குந்தவியின் காரணமாக மீண்டும் அன்பு தளிர்த்து ஆனந்தம் பொங்கத் தொடங்கியது. குந்தவியின் ஒவ்வொரு சொல்லும் செயலும் நோக்கும் சமிக்ஞையும் சக்கரவர்த்திக்குப் புளகாங்கிதம் உண்டாக்கின.

தந்தையின் வரவை எதிர்நோக்கிக் குந்தவி தேவி அரண்மனை உப்பரிகையின் நிலா மாடத்தில் உட்கார்ந்திருந்தாள்.

பார்த்திபன்

# அமரர் கல்கி

பௌர்ணமிக்குப் பிறகு மூன்று நாள் ஆகியிருக்கலாம். கிழக்கு அடி வானத்தில் வரிசையாக உயர்ந்திருந்த பனை மரங்களுக்கு நடுவில், சிறிது குறைந்த சந்திரன், இரத்தச் சிவப்பு ஒளியுடன் உதயமாகிக் கொண்டிருந்தான். மற்ற நாட்களாயிருந்தால் அழகு மிகுந்த இந்த வானக் காட்சியின் வனப்பில் ஈடுபட்டு மெய் மறந்திருப்பாள். ஆனால், இன்று இரவு அவளுக்கு எதிலுமே மனம் செல்லவில்லை. வீதியில் குதிரை மீது வைத்துச் சங்கிலியால் பிணைத்துக்கொண்டு போகப்பட்ட இராஜ குமாரனுடைய ஞாபகமாகவே அவள் இருந்தாள். அவனைப் பற்றி விசாரிப்பதற்காகவே தந்தையின் வருகையை வழக்கத்தைவிட அதிக ஆர்வத்துடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள்.

கடைசியாக, நரசிம்மவர்மரும் வந்து சேர்ந்தார். குந்தவி அவரை ஓடி வரவேற்று, அவருடைய விசாலமான இரும்புத் தோள்களைத் தன் இளங் கரங்களினால் கட்டிக் கொண்டு தொங்கினாள். ''ஏன் அப்பா, இன்றைக்கு இத்தனை நேரம்?'' என்று கேட்டாள். என்றுமில்லாத அவளுடைய பரபரப்பையும் ஆர்வத்தையும் பார்த்து நரசிம்மவர்மர் ஆச்சரியப்பட்டுப் போனார். ''அப்படியொன்றும் நேரமாகிவிடவில்லை அம்மா! தினம் போலத்தானே வந்திருக்கிறேன். ஏதாவது விசேஷம் உண்டா?'' என்று கேட்டார்.

குந்தவி ஏதோ சொல்ல ஆரம்பித்தவள் சட்டென்று நிறுத்திக் கொண்டாள். ''ஒரு விசேஷம் இருக்கிறது அப்பா! ஆனால் இப்போது சொல்ல மாட்டேன். நீங்கள் முதலில் சொல்லுங்கள். சபையில் ஏதாவது விசேஷம் உண்டா?'' என்று கேட்டாள்.

''ஆமாம்; உண்டு. இலங்கையிலிருந்து இன்றைக்குச் செய்தி வந்தது. அங்கே நடந்த பெரும் போரில் நமது சைன்யங்கள் மகத்தான வெற்றியடைந்தனவாம். 'இலங்கை மன்னன் சமாதானத்தைக் கோருகிறான்; என்ன செய்யட்டும்?' என்று உன் தமையன் ஓலை அனுப்பியிருக்கிறான்.''

''ரொம்ப சந்தோஷம், அப்பா! அப்படியானால் அண்ணா சீக்கிரம் திரும்பி வந்துவிடுவான் இல்லையா?''

''கொஞ்ச காலம் கழித்துத்தான் வருவான். மதுரையில் உன் மாமாவுக்குக் கொஞ்ச நாளாக தேக அசௌகர்யமாயிருக்கிறதாம்; அங்கே போய்க் கொஞ்ச காலம் இருந்துவிட்டு வரச் சொல்லியிருக்கிறேன். நீயும் வேணுமானால் மதுரைக்குப் போய் வருகிறாயா, குழந்தாய்! உன் மாமா உன்னைப் பார்க்க வேணுமென்று எவ்வளவோ ஆசைப்படுகிறாராம்.''

''அதெல்லாம் முடியாது. நான் உங்களை விட்டுப் போக மாட்டேன். இருக்கட்டும்; இன்னும் ஏதாவது விசேஷம் உண்டா, அப்பா!''

''உண்டு; சோழ நாட்டில்...''

''சோழ நாட்டில்'' என்றதும் குந்தவியின் உடம்பில் படபடப்பு உண்டாயிற்று. இதைப் பார்த்த சக்கரவர்த்தி மிகவும் வியப்படைந்தவராய், ''என்ன குந்தவி! உனக்கு என்ன உடம்பு?'' என்று கேட்டார்.

''ஒன்றுமில்லை அப்பா! சோழ நாட்டில் என்ன விசேஷம்? சொல்லுங்கள்'' என்றாள் குந்தவி.

''சோழ நாட்டில் காழி என்னும் ஊரில் ஒரு இளம்பிள்ளை தெய்வ சாந்நித்யம் பெற்று மகா ஞானியாய் விளங்குகிறாராம். சிவபெருமான் பேரில் தீந்தமிழ்ப் பாடல்களைத் தேனிசையாய்ப் பொழிகிறாராம். தீராத வியாதிகள் எல்லாம் அவர் கையி

# கனவு





னால் திருநீறு வாங்கி இட்டுக்கொண்டால் தீர்ந்து விடுகிறதாம். ஞானசம்பந்தர் என்று பெயராம்!''

''நன்றாயிருக்கிறது, போங்கள். யமனுக்கு அப்படி ஒரு விரோதி கிளம்பியிருக்கிறாரா? அந்தப் பிள்ளை திருநீறு கொடுத்து வியாதிகள் எல்லாவற்றையும் தீர்த்துக்கொண்டு போனால், யமலோகமல்லவா சூன்யமாய்ப் போய்விடும்? நீங்களுந்தான் இப்போதெல்லாம் யுத்தம் செய்வதையே நிறுத்தி விட்டீர்கள்!'' என்றாள் குந்தவி.

''எல்லாம் உன்னாலேதான்! நீ என் கழுத்தைக் கட்டிக்கொண்டு விடமாட்டேனென்றால், நான் யுத்தத்துக்குப் போவது எப்படி? உன்னை வேறொருவன் கழுத்தில் கட்டிவிட்டால் அப்புறம்...''

''அப்புறம் அவன் பாடு அதோகதிதான்! அது கிடக்கட்டும், அப்பா! இன்றைக்கு வேறு விசேஷம் ஒன்றுமில்லையா!'' என்றாள் குந்தவி.

''ஆமாம், இன்னும் ஒரே ஒரு விசேஷம் இருக்கிறது. கடல் மல்லைக்கு நாம் போயிருந்தபோது உறையூரிலிருந்து ஒரு தூதன் வந்தானே, ஞாபகம் இருக்கிறதா? நீகூட விஷயத்தைக் கேட்டுவிட்டு, 'இந்த சோழ ராஜகுமாரனை நன்றாய்த் தண்டிக்க வேண்டும்' என்று சொன்னாயே? அவனைச் சிறைபிடித்து இன்றைக்கே கொண்டு வந்து சேர்த்தார்கள்...''

''அப்பா! அவனைச் சங்கிலிகளால் கட்டிக் குதிரை மேல் வைத்துக்கொண்டு வந்தார்களா?'' என்று குந்தவி கேட்டாள்.

''ஆமாம்; உனக்கு எப்படித் தெரிந்தது'' என்றார் சக்கரவர்த்தி.

''மத்தியானம் நான் கோயிலுக்குப் போய்க் கொண்டிருந்தபோது வீதியில் பார்த்தேன்.''

குந்தவியிடம் வழக்கமில்லாத படபடப்பு அன்று ஏற்பட்டிருந்ததின் காரணத்தை நரசிம்மவர்மர் அப்போது அறிந்து கொண்டார்.

''ஒருவேளை அவனாய்த்தானிருக்கும். அது போகட்டும், குழந்தாய்! நமது அப்பர் பெருமானின் பதிகம் ஒன்றைப் பாடு பார்க்கலாம்'' என்றார் சக்கரவர்த்தி.

''அப்பா அந்த இராஜகுமாரனை இராத்திரி எங்கே வைத்திருப்பார்கள்?'' என்று குந்தவி கேட்டாள்.

''வேறு எங்கே வைத்திருப்பார்கள்? காராக்கிரகத்தில் வைத்திருப்பார்கள்!''

''ஐயையோ!''

''என்ன குழந்தாய்? எதைக் கண்டு பயப்படுகிறாய்!'' என்று நரசிம்மவர்மர் தூக்கிவாரிப் போட்டாற்போல் எழுந்து நாலுபுறமும் பார்த்தார்.

குந்தவி அவரைக் கீழே அமர்த்தி, ''ஒன்றுமில்லை, அப்பா! காராக்கிரகத்தி





லிருந்து அந்த இராஜகுமாரன் தப்பித்துக் கொண்டு போய்விட்டால் என்ன செய்கிறது என்று பயந்தேன்!'' என்றாள்.

''இவ்வளவுதானே!'' என்று சக்கரவர்த்தி புன்னகை செய்து, ''அந்த மாதிரியெல்லாம் பயப்படாதே! பல்லவ ராஜ்யாதிகாரம் இன்னும் அவ்வளவு கேவலமாய்ப் போய் விடவில்லை. விக்கிரமன் தப்ப முயன்றானானால் அந்த க்ஷணமே பல்லவ வீரர்களின் பன்னிரண்டு ஈட்டி முனைகள் அவன் மீது ஏக காலத்தில் பாய்ந்துவிடும்!'' என்று சொன்னார்.

இந்தக் கொடூரமான வார்த்தைகளைக் கேட்டு, குந்தவியின் உடம்பு இன்னும் அதிகமாகப் பதறிற்று.

''அப்பா! நான் ஒன்று சொல்கிறேன், கேட்கிறீர்களா?'' என்றாள் குந்தவி.

''நான் கேட்காவிட்டால் நீ என்னை விடத்தான் போகிறாயா?'' என்றார் சக்கரவர்த்தி.

''அந்த இராஜகுமாரனுடைய முகத்தைப் பார்த்தால் அப்படியொன்றும் பொல்லாதவனாகத் தோன்றவில்லை அப்பா!





யாரோ துஷ்ட மனிதர்கள் அவனுக்குத் துர்போதனை செய்து இப்படி அவனை உங்களுக்கு விரோதமாய்க் கிளப்பிவிட்டிருக்க வேண்டும்.''

''நீ சொல்வது ரொம்ப வாஸ்தவம். நான் கூட அவ்வாறுதான் கேள்விப்பட்டேன். யாரோ ஒரு சிவனடியார் அடிக்கடி இந்த விக்கிரமனையும், அவனுடைய தாயாரையும் போய்ப் பார்ப்பதுண்டாம். அந்த வேஷதாரிதான் விக்கிரமனை இப்படிக் கெடுத்திருக்க வேண்டுமென்று தகவல் கிடைத்திருக்கிறது.''

''பார்த்தீர்களா? நான் எண்ணியது சரியாய்ப் போயிற்றே! உறையூரில் என்னதான் நடந்ததாம்? பெரிய சண்டை நடந்ததோ? ரொம்பப் பேர் செத்துப் போனார்களோ?''

''பெரிய சண்டையுமில்லை; சின்னச் சண்டையுமில்லை. இந்த அசட்டுப் பிள்ளை ஏமாந்து அகப்பட்டுக் கொண்டதுதான் லாபம். மாரப்ப பூபதி என்று இவனுக்கு ஒரு சித்தப்பன் இருக்கிறான். அவன் பெரிய படைகளைத் திரட்டிக் கொண்டு வருகிறேன் என்று இந்தப் பிள்ளையிடம் ஆசை காட்டியிருக்கிறான். அவன் அன்றைக்குக் கிட்டவே வரவில்லை. அதோடு, நமது தளபதி அச்சுதவர்மரிடம் சமாசாரத்தையும் தெரியப்படுத்திவிட்டான். அன்று பல்லவ வீரர்கள் ஆயத்தமாய் இருந்தார்கள். வெளியூர்களிலிருந்து வந்த சில ஜனங்களை ஊருக்கு வெளியிலேயே வளைத்துக்கொண்டு விரட்டி விட்டார்கள். விக்கிரமனோடு கடைசியில் சேர்ந்தவர்கள் ஒரு கிழக் கொல்லனும், ஒரு படகோட்டியும், இன்னும் நாலைந்து பேருந்தான். கிழவன் அங்கேயே செத்து விழுந்துவிட்டான். மற்றவர்களையெல்லாம் சிறைப்படுத்தி விக்கிரமனை மட்டும் என் கட்டளைப்படி இங்கே அனுப்பினார்கள்...''

''ஐயோ, பாவம்!'' என்றாள் குந்தவி.

''எதற்காகப் பரிதாபப்படுகிறாய், அம்மா! இராஜ துரோகம் ஜயிக்கவில்லையே என்று பரிதாபப்படுகிறாயா?''

''இல்லை, இல்லை, இந்த இராஜகுமாரன் இப்படி ஏமாந்து போய்விட்டானே என்றுதான். ஆமாம் அப்பா! இந்த மாதிரி நடக்கப் போகிறதென்று உங்களுக்கு முன்னாலேயே தெரிந்திருந்ததே, அது எப்படி?''

''என்னிடந்தான் மந்திர சக்தி இருக்கிறது என்று உனக்குத் தெரியுமே...? ஆமாம், அப்பர் பெருமானின் பதிகம் பாடப் போகிறாயா இல்லையா?'' என்று மீண்டும் சக்கரவர்த்தி கேட்டுப் பேச்சை மாற்ற முயன்றார்.

''அப்பா எனக்கு ஒன்று தோன்றுகிறது. இந்தத் தடவை மட்டும் அந்த இராஜகுமாரனை நீங்கள் மன்னித்து விட்டால்...''

''என்ன சொன்னாய் குந்தவி! பெண் புத்தி என்பது கடைசியில் சரியாய்ப் போய் விட்டதே? அன்றைக்கு அவனைக் கடுமையாகத் தண்டிக்க வேண்டும் என்றாயே! அதனால்தான் பெண்களுக்கு இராஜ்ய உரிமை கிடையாதென்று பெரியவர்கள்



வைத்திருக்கிறார்கள்..."

"சுத்தப் பிசகு! பெண்களுக்கு இராஜ்ய உரிமை இருந்தால் உலகத்தில் சண்டையேயிராது. அந்த இராஜகுமாரனை மட்டும் நான் சந்தித்துப் பேசினேனானால் அவனுடைய மனத்தை மாற்றி விடுவேன். முடியுமா, முடியாதா என்று பார்க்கலாமா, அப்பா?"

"முடியலாம்! குழந்தாய், முடியலாம். அவனுடைய மனத்தை மாற்றுவது உன்னால் முடியாத காரியம் என்று நான் சொல்லவில்லை. உனக்கு முன்னால் எத்தனையோ ஸ்திரீகள் புத்திசாலிகளை அசடுகளாக்கியிருக்கிறார்கள். வைராக்கிய சீலர்களைப் பைத்தியமாக்கியிருக்கிறார்கள். வீரர்களைக் கோழைகளாக்கியிருக்கிறார்கள். இதற்கு மாறாக சாதாரண மனுஷ்யர்களைப் புத்திசாலிகளாகவும், வைராக்கிய புருஷர்களாகவும், வீரர்களாகவும் செய்த ஸ்திரீகளும் இருந்திருக்கிறார்கள். பெண் குலத்துக்கு இந்தச் சக்தி உண்டு. உண்மைதான்; நீ நினைத்தாயானால், விக்கிரமனைச் சுதந்திரம் என்ற பேச்சையே மறந்து விடும்படிச் செய்து விடலாம். ஆனால், உன்னுடைய சாமர்த்தியத்தை நீ கொஞ்சம் முன்னாலேயே காட்டியிருக்க வேண்டும். அவன் குற்றம் செய்வதற்கு முன் உன் பிரயத்தனத்தைச் செய்திருக்க வேண்டும். இனிமேல் பிரயோஜனமில்லை, அம்மா! குற்றவாளியைத் தண்டித்தேயாக வேண்டும். இன்று விக்கிரமனைச் சும்மா விட்டுவிட்டால், நாளைக்கு ஒவ்வொரு ஊரிலும் ஒருவன் கலகம் செய்யக் கிளம்புவான். அப்புறம் இராஜ்யம் போகிற வழி என்ன?"

இந்த வார்த்தைப் புயலில் அகப்பட்ட குந்தவி பதில் சொல்லத் தெரியாமல் திகைத்து நின்றாள். சற்று நேரம் பொறுத்து, "அப்பா! அவனுக்கு என்ன தண்டனை விதிப்பீர்கள்?" என்று கேட்டாள்.

"இப்போது சொல்ல முடியாது குந்தவி! நாளைக்குத் தர்மாசனத்தில் உட்கார்ந்து

> "உன்னுடைய சாமர்த்தியத்தை நீ கொஞ்சம் முன்னாலேயே காட்டியிருக்க வேண்டும் குந்தவி!"

விசாரணை செய்யும்போது என்ன தண்டனை நியாயமென்று தோன்றுகிறதோ, அதைத்தான் அளிப்பேன். நியாயத்திலிருந்து ஒரு அணுவளவேனும் தவறினார்கள் என்ற அவச்சொல் இதுவரையில் பல்லவ வம்சத்துக்கு ஏற்பட்டதில்லை; இனிமேலும் ஏற்படாது" என்றார் சக்கரவர்த்தி.

## 10. துறைமுகத்தில்...

அன்றிரவு குந்தவி சரியாகத் தூங்கவில்லை. சோழ ராஜகுமாரனுடைய சோகமும், கம்பீரமும் பொருந்திய முகம் அவள் மனக்கண்ணின் முன்னால் இடைவிடாமல் தோன்றி அவளுக்குத் தூக்கம் வராமல் செய்தது. நள்ளிரவுக்குப் பிறகு சற்றுக் கண்ணயர்ந்த போது, என்னவெல்லாமோ பயங்கரமான கனவுகள் தோன்றியதால், அவள் அடிக்கடி திடுக்கிட்டுக் கண் விழிக்க வேண்டியதாயிற்று.

சோழ இராஜகுமாரனைக் கழுத்து வரையில் பூமியில் புதைத்திருக்கிறது. அவனை நோக்கி ஒரு மதயானை அதிவேகமாக ஓடி வருகிறது. அடுத்த நிமிஷம், ஐயோ! யானையின் கால்கள் - தூணையொத்த கால்கள், அந்த சுகுமாரனுடைய தலையை இடறிவிடப் போகின்றன! குந்தவி பதைபதைப்புடன் ஓடி வந்து யானை வரும் வழியில் நிற்கிறாள். யானை தன் துதிக்கையினால் அவளை இலாகவமாகத் தூக்கித் தன் முதுகின் மேல் வைத்துக் கொண்டு மேலும் ஓடுகிறது. குந்தவி பயங்கரத்துடன் எதிரே பூமியில் புதைந்து நிற்கும் இராஜகுமாரனுடைய முகத்தைப் பார்க்கிறாள்! அந்தச் சமயத்திலும் அந்த முகத்தில் அலட்சியமும் அவமதிப்பும் கலந்த புன்னகை குடிகொண்டிருப்பதைக் காண்கிறாள். "ஐயோ!" என்று கதறிக் கொண்டு கண் விழிக்கிறாள். கண்டதெல்லாம் கனவென்று தெரிகிறது. ஆனாலும் அவள் உடம்பு வெகுநேரம் நடுங்கிக் கொண்டிருக்கிறது.



**விரைந்து பள்ளியறைக்குச் சென்று மஞ்சத்தில் குப்புறப்படுத்து விம்மி விம்மி அழுதாள் குந்தவி!**

சற்று நேரத்துக்கெல்லாம் மறுபடியும் கண்ணயர்ந்து வருகிறது. அரைத் தூக்கத்தில் மீண்டும் பயங்கரமான கனவு. கழுமரங்கள் வரிசையாக நட்டிருக்கின்றன. சோழ இராஜகுமாரனைக் கழுவேற்றுவதற்காகக் கொண்டு வந்து நிறுத்தியிருக்கிறார்கள். குந்தவி அவ்விடத்துக்கும் ஓடோடி வருகிறாள். துர்க்கை அம்மனை மனத்தில் தியானித்துக் கொண்டு அந்தக் கழுமரங்கள் பற்றி எரிய வேண்டுமென்று பிரார்த்திக்கிறாள். அவை தீப்பற்றி எரிகின்றன. குந்தவி அளவில்லாத மகிழ்ச்சியுடன் இராஜகுமாரன் நின்ற இடத்தை நோக்குகிறாள். அந்தோ! அவனைச் சுற்றிலும் பன்னிரண்டு பல்லவ வீரர்கள் நின்று பன்னிரண்டு ஈட்டிகளை அவன் மீது செலுத்தச் சித்தமாயிருக்கிறார்கள். அடுத்த கணத்தில் ஈட்டிகள் அந்த அரசிளங்குமாரனுடைய மிருதுவான தேகத்தில் பாயப் போகின்றன. குந்தவி ''ஐயோ!'' என்று கதறிக்கொண்டு கீழே விழுகிறாள். கண் விழித்துப் பார்த்தால், மஞ்சத்திலிருந்து கீழே விழுந்திருப்பதாகத் தெரிகிறது.

இதன் பிறகு குந்தவி தூங்குவதற்குப் பிரயத்தனம் செய்யவில்லை. யானையின் காலில் வைத்து இடறுதல், கழுவேற்றுதல் முதலிய கொடூரமான தண்டனைகளெல்லாம் தன் தகப்பனாரின் தர்ம ராஜ்யத்தில் இல்லையென்பதை ஞாபகப்படுத்திக் கொண்டு தைரியமடைந்தாள்.

ஒருவாறு இரவு கழிந்து பொழுது விடிந்தது. சக்கரவர்த்தி சபைக்குப் புறப்படும் நேரமும் வந்தது. அவரிடம் மறுபடியும் சோழ ராஜகுமாரனைப் பற்றிப் பேச வேண்டும் என்று குந்தவி துடிதுடித்தாள். ஆனால், சக்கரவர்த்தியைப் பரிவாரங்கள் சூழ்ந்திருந்தபடியால் அது சாத்தியமாயில்லை. அவர் விடைபெற்றுக் கொண்டு கொஞ்ச தூரம் சென்று விட்டார். ஏதாவது சொல்லாவிட்டால் குந்தவிக்கு நெஞ்சு வெடித்துவிடும் போலிருந்தது. ''அப்பா! நான் சொன்னது ஞாபகம் இருக்கட்டும்'' என்றாள். நரசிம்மவர்மர் அவளைத் திரும்பிப் பார்த்து, ''எதைச் சொல்கிறாய், குந்தவி! ஓகோ! சோழ ராஜகுமாரனைக் கடுமையாய்த் தண்டிக்க வேண்டுமென்று சொன்னாயே... அதுதானே? ஞாபகம் இருக்கிறது!'' என்று சொல்லிவிட்டுப் பின்னர் திரும்பிப் பார்க்காமலே சென்று விட்டார்.

குந்தவிக்குச் சொல்ல முடியாத ஆத்திரமும், துக்கமும் பொங்கிக் கொண்டு வந்தன. விரைந்து பள்ளியறைக்குச் சென்று மஞ்சத்தில் குப்புறப்படுத்துக் கொண்டு, கொஞ்ச நேரம் விம்மி விம்மி அழுது கொண்டிருந்தாள். தன்னாலேதான் சோழ ராஜகுமாரன் கடுந்தண்டனை அடையப் போகிறான் என்ற எண்ணம் அவள் மனத்தில் வேரூன்றி விட்டது. இது அவனுக்குத் தெரியும்போது எவ்வளவு தூரம் தன்னை வெறுப்பானென்ற எண்ணம் அவளைப் பெரும் வேதனைக்கு உள்ளாக்கியது.

தான் ஏதாவது செய்துதான் ஆக வேண்டுமென்று அவள் பதைபதைத்தாள். சற்று நேரத்துக்கெல்லாம் அரண்மனை அதிகாரியை அழைத்து வரச்செய்து, ''உதயவர்மரே! இன்று சக்கரவர்த்தியின் சபையில் சோழ ராஜகுமாரனுடைய விசாரணை முடிந்ததும், அதன் விவரத்தை உடனே எனக்கு வந்து தெரியப்படுத்த ஏற்பாடு செய்ய வேண்டும். ஒரு கண நேரங்கூட இதில் தாமதம் கூடாது'' என்றாள். அரண்மனை அதிகாரி, ''அப்படியே ஆகட்டும்'' என்று சொல்லிச்

சபைக்கு ஆளையும் அனுப்பி வைத்தார்.

குந்தவி அன்று வழக்கமான காரியங்கள் ஒன்றும் செய்யவில்லை. நந்தவனம் சென்று மலர் எடுக்கவில்லை. ஆலயங்களுக்கும் போகவில்லை. பல்லைக் கடித்துக் கொண்டு இராஜசபையிலிருந்து எப்போது ஆள் வரும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தாள். கடைசியாக அந்த ஆளும் வந்து சேர்ந்தான். விசாரணையையும் முடிவையும் பற்றி விவரமாகக் கூறினான்:

சக்கரவர்த்தி ரொம்பவும் கருணை காட்டினாராம். "இப்போதாவது பல்லவ சாம்ராஜ்யத்துக்குப் பணிந்து கப்பம் செலுத்துவதாக ஒப்புக்கொண்டாயானால் உன்னுடைய குற்றத்தை மன்னித்து சோழ இராஜ்யத்துக்கும் முடிசூட்டி வைக்கிறேன்" என்றாராம். அதை சோழ இராஜகுமாரன் ஒரே பிடிவாதமாக மறுத்து விட்டானாம். அதோடு நில்லாமல், சக்கரவர்த்தியைத் தன்னுடன் வாட்போர் செய்யும்படி அழைத்தானாம்! அதன் மேல் சக்கரவர்த்தி தீர்ப்பு கூறினாராம்! அவனுடைய இளம்பிராயத்தை முன்னிட்டு அவனுக்கு மரண தண்டனை விதிக்காமல் தேசப் பிரஷ்ட தண்டனை விதிப்பதாகவும், மறுபடியும் சோழ நாட்டுக்குள் அவன் பிரவேசித்தால் சிரசாக்கினைக்குள்ளாக வேண்டுமென்றும் சொல்லி, உடனே அவனைக் கப்பலேற்றித் தீவாந்திரத்துக்கு அனுப்பி விடும்படி கட்டளையிட்டாராம். அதன்படி அவனை உடனே மாமல்லபுரம் துறைமுகத்துக்குக் கொண்டுபோய் விட்டார்கள் என்பதையும் இராஜசபையிலிருந்து வந்த ஆள் தெரிவித்தான்.

விக்கிரமனுக்கு மரண தண்டனை விதிக்கப்படவில்லை என்ற செய்தி குந்தவிக்குச் சிறிது ஆறுதல் அளித்தது. ஆனால், அவனைக் கப்பல் ஏற்றி அனுப்பப் போகிறார்கள்; இனிமேல் என்றென்றைக்கும் அவனைத் தான் பார்க்க முடியாமற் போகலாம் என்ற எண்ணம் மிகுந்த துன்பத்தை உண்டாக்கியது. அந்த அரசிளங்குமரன் கப்பலேறிப் போவதற்கு முன், ஒரு தடவை அவனைப் பார்த்துவிட வேண்டுமென்ற ஆவல் பொங்கி எழுந்தது. அவளுடைய உடம்பையும் மனத்தையும் ஆத்மாவையுமே இந்த ஆவல் கவர்ந்து கொண்டது. அந்த இராஜகுமாரனை உடனே பார்க்க வேண்டுமென்று அவளுடைய தேகத்தின் ஒவ்வொரு அணுவும் துடித்தது. அவனைத் தான் நேரில் பார்த்துப் பேசினால் அவனுடைய மனத்தை ஒரு வேளை மாற்றித் தன் தந்தையின் கீழ் சிற்றரசனாயிருக்கச் சம்மதிக்கும்படி செய்யலாம் என்ற ஆசை உள்ளத்தின் ஒரு மூலையில் கிடந்தது.

குந்தவி அக்கணமே தன் தந்தையைப் பார்க்க விரும்பினாள். விக்கிரமனுடைய விசாரணை முடிந்ததும் சக்கரவர்த்தி குதிரை மீதேறி எங்கேயோ போய்விட்டார் என்றும், போன இடந்தெரியாது என்றும் தெரியவந்தபோது அவளுக்குப் பெரிதும் ஏமாற்ற முண்டாயிற்று. சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தாள். பிறகு அரண்மனை அதிகாரியை அழைத்து, "உதயவர்மரே, மல்லைத் துறைமுகத்துக்கு நான் உடனே போக வேண்டும்! என் தாயாரின் நவரத்தின மாலையைக் காணவில்லை. மாமல்லபுரத்து அரண்மனையில் போட்டுவிட்டு வந்துவிட்டேன் போலிருக்கிறது. நானே போய்தான் தேடி எடுக்க வேண்டும்" என்றாள்.

உதயவர்மர் சிறிது தயங்கி, "சக்கரவர்த்தி வந்தவுடன் போகலாமே!" என்றதும் குந்தவிக்கு வந்த கடுங்கோபத்தைக் கண்டு அவர் மிரண்டு விட்டார். குந்தவி தேவியின் கட்டளைக்கு மாறு சொல்லும் வழக்கம் இதுவரை இல்லையாதலால், மாமல்லபுரத்துக்கு அவ்வளவு அவசரமாகவும் தனியாகவும் அவள் போகும் யோசனை ஆச்சரியம்



அந்தச் சாமியாரைக் கையும் மெய்யுமாய்ப் பிடித்துவிட வேண்டும். குந்தவி, பல்லக்கை அவரை நோக்கிப் போகும்படி கட்டளையிட்டாள்!

அளித்தாலும், அரண்மனை அதிகாரி உடனே அதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார். சற்று நேரத்துக்கெல்லாம் குந்தவி பரிவாரங்களுடன் பல்லக்கில் மாமல்லபுரத்துக்குப் பிரயாணமானாள். இதுவரையும் இல்லாத வழக்கமாக வழியில் பல்லக்குச் சுமப்பவர்களை அவள் அடிக்கடி விரைந்து செல்லுமாறு ஆக்ஞாபித்தாள். கடைசியாக மாமல்லபுரத்தை அடைந்ததும், விக்கிரமனை ஏற்றிக்கொண்ட கப்பலானது துறைமுகத்திலிருந்து அப்போதுதான் பாய் விரித்துக் கிளம்பிக் கொண்டிருக்கிறது என்று தெரிய வந்தது.

குந்தவியின் பல்லக்கு கடற்கரையை அடைந்தபோது அவளுடைய கண்முன்னால் தோன்றிய காட்சி இருதயத்தைப் பிளப்பதாயிருந்தது. சிங்கக் கொடி பறந்த பாய்விரித்த கப்பல் கிளம்பிக் கடலோரமாகப் போய்க் கொண்டிருந்தது. அதில் நேற்று அவள் வீதியில் பார்த்த இராஜகுமாரன் கயிற்றால் பிணிப்புண்ட கைகளைக் கூப்பியவண்ணம் நின்றுகொண்டிருந்தான். அச்சமயம் அவனுடைய பார்வை கரை மீதுதான் இருந்தது. அவ்வளவு பக்தி விசுவாசத்துடன் அவன் யாரைப் பார்க்கிறான் என்று குந்தவி தெரிந்துகொள்ள விரும்பி, கரையில் அவனுடைய பார்வை சென்ற திசையை நோக்கினாள். ஜடாமுடி தரித்த கம்பீரத் தோற்றமுடைய சிவனடியார் ஒருவர் அங்கே நின்றுகொண்டிருந்தார். அவர் தமது வலது கரத்தைத் தூக்கி விக்கிரமனை ஆசீர்வதிக்கும் நிலையில் காணப்பட்டார்.



மறுபடியும் குந்தவி விக்கிரமனை நோக்கினாள். ஒருகண நேரம் அவனுடைய பார்வை இவள் பக்கம் திரும்புவது போலிருந்தது. "இது நிஜந்தானா? அல்லது பிரமையா?" என்று நிச்சயமாய்த் தெரிவதற்குள்ளே, விக்கிரமன் முகத்தைத் திருப்பிக்கொண்டு, மீண்டும் சிவனடியார் இருந்த திசையை நோக்கினான்.

குந்தவிக்கு அப்போது சட்டென்று ஒரு ஞாபகம் வந்தது. சோழ ராஜகுமாரனுக்கு துர்போதனை செய்து, அவன் புத்தியைக் கெடுத்தவர் ஒரு சிவனடியார் என்பதாக நேற்று அப்பா சொல்லவில்லையா? அந்தப் பொல்லாத சாமியார் இவராய்த்தான் இருக்க வேண்டும்! சந்தேகமே இல்லை!

அந்தச் சாமியாரைக் கையும் மெய்யுமாய்ப் பிடித்துவிட வேண்டுமென்னும் எண்ணத்துடன், குந்தவி பல்லக்கை அவரிருந்த திசையை நோக்கி விரைந்து போகும்படி கட்டளையிட்டாள். ஆனால், அடுத்த கணத்திலேயே சிவனடியார் துறைமுகத்தில் வேலை செய்துகொண்டிருந்த ஆட்களுக்குப் பின்னால் மறைந்து மாயமாய்ப் போய்விட்டார்! குந்தவி எவ்வளவோ தேடியும் அவரைக் கண்டுபிடிக்க முடியவில்லை.

இதற்குள்ளாக விக்கிரமன் இருந்த கப்பலும் கடலில் வெகுதூரம் போய் விட்டது.

(தொடரும்)

"துணிக் கடையில ஒரே கூட்டமா இருக்கே."

"அது இருக்கட்டும் சார்... நீங்க கட்டியிருந்த வேஷ்டி எங்கே?"

- சிக்ஸ்முகம்









"ஒவ்வொரு நாட்டு மண்ணுக்கும் ஒரு வாசம் இருக்கிறது என்று மன்னர் கூறுகிறாரே! எப்படி அவருக்கு அது தெரிந்தது!"

"பல நாட்டுப் போரில் மண்ணைக் கவ்வியவராயிற்றே!"

- சென்னிமலை செந்தில்குமார்

# மன்னனின் மண் வாசம்!

"நேத்து ராத்திரி கடவுள் மாதிரி ஒரு திருடன் வந்தான்."

"அதென்ன திருடனைப்போய் கடவுள் மாதிரின்னு சொல்றே?"

"பக்கத்து வீட்டுக்காரியோட நகை, பட்டுப் புடைவை எல்லாம் திருடிட்டுப் போயிட்டானே!"

- ஆர்.என்.செழியன்







## அருள்வாக்கு

# கொஞ்சம் கொஞ்சமாக...



"இராமேஸ்வரத்துக்குப் போ, அரச மரத்தைச் சுற்று, பிள்ளை பிறக்கும். சூர்ய நமஸ்காரம் செய், நேத்ர ரோகம் சரியாகப் போகும். கனகதாரா ஸ்தவம் சொல்லு, ரூபாய் வரும்" என்றெல்லாம் லௌகீகப் பலன்களுக்காகவே பல காரியங்களை சாஸ்திரம் சொல்கிறது. இந்தப் பலனில் உள்ள பற்றினாலேயே பெரும்பாலான ஜனங்கள் இவற்றைச் செய்கிறார்கள். இவர்கள் வாஸ்தவத்தில் உயர்ந்த அறிவு பெறாத 'அவித்வான்'கள் தான். இவர்களைத்தான் 'ஸக்தா: கர்மண்யவித்வாம்ஸோ' என்கிறார். இவர்களிடம், "இப்படி அல்ப பலனையெல்லாம் நினைக்காதீர்கள், ஈஸ்வர அநுபவம் என்ற உயர்ந்த லட்சியத்தையே நினையுங்கள்" என்று உபதேசம் பண்ணினால் எடுபடாது. அவர்களுடைய சம்ஸ்காரக் குறைவு காரணமாக, அவர்களை இப்போது இருக்கிற இடத்திலிருந்தே, அவர்களுடைய மனசை அநுசரித்துக் கொஞ்சம் கொஞ்சமாகத்தான் மேலே கொண்டுபோக வேண்டும். இதற்கு அவர்களைப் பக்குவப்படுத்துவதற்காகத்தான் சாஸ்திரங்களே அவர்களுக்கு இப்படிப்பட்ட ஆத்ம சம்பந்தமில்லாத காரியங்களையும் கொடுக்கிறது. பலனுக்காகத்தான் அவர்கள் இவற்றைச் செய்கிறார்கள். செய்துவிட்டுப் போகட்டும். ஆனால், இப்படிக் காரியம் பண்ணுவதால் என்ன ஏற்படுகிறதென்றால் இவர்கள் உத்தேசித்த பலன் உண்டாவதோடு கூட, இவர்கள் உத்தேசிக்காமலே கொஞ்சம் கொஞ்சமாகச் சித்தசுத்தி என்ற பெரிய பலன் உண்டாக ஆரம்பிக்கிறது.

- ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்

# சி.ஐ.டி. விஷ்வா துப்பறியும்

# இறந்தவனைத் தேடு 10

கதை: பருதலம் சுகுமாரன்

படம்: ஜெயராஜ்













இந்தா குத்து..
ஆ.. இடுப்பு... போச்சு


போலீஸ் வந்து மூர்த்தி, அவன் மனைவி, தர்மா அண்ட் கோவை வளைக்கிறது.


கமிஷனர் பாராட்டுகிறார்...
சபாஷ் விஷ்வா... உண்மையான குற்றவாளிகளைப் பிடிச்சுட்டீங்க! உங்களை மாதிரி ஆபீஸர்ஸ்தான் நம்ம டிபார்ட்மெண்டுக்குத் தேவை!




விஷ்வா பெரியவரை ஆறுதல் படுத்துகிறார்.

ஸாரி பெரியவரே... செல்வராஜ் இறந்துட்டாரு. என்னை உங்கள் மகனா நினைச் சுக்கங்க.

முற்றும்.



# பூம்புகார் வழங்கும்

## "கொலு பொம்மைகள் கண்காட்சி"

(அனைத்து மாநில கொலு பொம்மைகள் கொண்ட சிறப்புக் கண்காட்சி)



**கண்காட்சி நடைபெறும் இடம்**

பூம்புகார் விற்பனை நிலையம்
108, அண்ணா சாலை, சென்னை-2.
தொலைபேசி : 28520624

1-10-07 முதல் 19-10-07 முடிய (ஞாயிறு உட்பட)
காலை 10.00மணி முதல் இரவு 8.00 மணி வரை

**10%** சிறப்புத் தள்ளுபடி





களிமண், காகிதக்கூழ், செம்மண், பளிங்குத்தூள் போன்ற வற்றால் செய்யப்பட்ட தசாவதாரம் செட், அஷ்டலட்சுமி செட், ராமர் செட், விநாயகர் செட், குபேரன் செட் மற்றும் 100க்கும் மேற்பட்ட செட் பொம்மை வகைகள்

அனைத்து கிரெடிட் கார்டுகளும் எவ்வித சேவைக் கட்டணமுமின்றி ஏற்றுக்கொள்ளப்படும்.

---

அமரர் கல்கியின்

**"பொன்னியின் செல்வன்"** தொடராதா ?

என்று ஏங்கிய ரசிகர்களுக்கு

**அனுஷா வெங்கடேஷ்**

எழுதிய

# காவிரி மைந்தன்



"இரண்டாவது கல்கி கிடைத்துவிட்டார்" .....

- தினமலர், திருச்சி - 20/2/2007

3 பாகங்கள், 1,300 பக்கங்கள்,
விலை : ரூ.470/-

விரைவில்
அனுஷா வெங்கடேஷ் எழுதிய
'தில்லையில் ஒரு கொள்ளைக்காரன்'

**The Avenue Press**, 9/25, D'Silva Road, Mylapore, Chennai - 600 004 Phone : 24990153

**கிடைக்கும் இடங்கள்**

Chennai : Higginbotham : 044-28513520; Uma Pathipagam : 044-25215363; New Booklands : 044-28158171; Shanthi Book House : 044-28546719; Giri Trading : 044-24640376; Ravi Book House : 044-24641751; Any Indian : 044-24329283; Leo Distributors : 044-24351283, Kovai : Vijaya Pathipagam : 0422-2394614; Madurai : Sarvodaya: 0452-2341746; Meenakshi : 9443262763; Malligai : 0452-2341739; Jeyam : 0452 - 2623636; Salem : Palaniappa Bros. : 0427-2450711; Chandra : 0427-2265635; Erode : Palaniappa Bros. : 0424-2255666; Trichy : Palaniappa Bros. : 0431-2702160; Devathi : 0431-2707708; Tirunelveli : Arulnandi Sivam : 0462-2339692.



# 20 : 20 வந்தாலும் வந்துச்சு... நம்மள யாரும் கண்டுக்க மாட்றாங்க!

## 30.9.2007 முதல் 6.10.2007 வரை

**மேஷம் :** திருமணத் தடை விலகும். வேலையில் நற்பெயர் கிட்டும். நீண்ட காலக் கடன் தொல்லை நிவர்த்தி ஆகும். நண்பர், உறவினர் மூலம் நல்ல தகவல் வந்து சேரும். குழந்தைகள் இடம் மாறிச் செல்வார்கள். மனக் குழப்பம் தீரும். வியாபாரத்தில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். உடல் ஆரோக்கியம் சீராகும். ராகு/கேது / சனி / குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**ரிஷபம் :** வீடு மனை வாங்க உகந்த காலம். சுபநிகழ்ச்சி கைகூடும். படிப்பில் முன்னேற்றம் ஏற்படும். நண்பர், உறவினர்கள் மூலம் அனுகூலம் ஏற்படும். உத்தியோகத்தில் வேலைப் பளு அதிகரிக்கும். உத்தியோக உயர்வு ஏற்படும். வழக்கு வெற்றி அளிக்கும். வெளிநாடு செல்லும் பாக்கியம் கிட்டும். மகப்பேறு உண்டு. நீண்ட காலம் வராத பணம் வந்து சேரும். ராகு/கேது/வழிபாடு செய்து வர நற்பலன் கிட்டும்.

**மிதுனம் :** சத்ரு தொல்லை நீங்கும். மன தைரியமும் தன்னம்பிக்கையும் நிறைந்து இருக்கும். வழக்கு வெற்றி அளிக்கும். நண்பர்கள் உதவி கிட்டும். திருமணக் காரியம் கைகூடி வரும். நீண்ட காலம் வராத கடன்கள் வசூலாகும். வீடு, மனை வாங்க நல்ல தருணம். கல்வி வளம் மேலோங்கும்.

### பரத்வாஜ் பதில்கள்

● ரங்கன், ஹைதராபாத்

**என் மகளின் எதிர்காலம் எப்படியிருக்கும்?**

உங்கள் மகளுக்குத் தற்போது சந்திர தசை நடைபெற்று வருகிறது. சந்திரன் லக்னத்தின் 6ல் அமர்ந்து லட்சுமி யோகம் பெற்று உள்ளதால், கல்வியில் நல்ல முன்னேற்றம் ஏற்படும். நல்ல வேலை வாய்ப்புக் கிட்டும். நாடு விட்டு நாடு போய் சம்பாதிக்கும் யோகம் உள்ளது. இல்லறம் இனிமையாக அமையும்.

**கடகம் :** பண வரவு காத்திருக்கிறது. சிலருக்கு இடமாற்றம் ஏற்படும். சுப நிகழ்ச்சி கைகூடும். இல்லற வாழ்வில் அனுசரித்துப் போவது நல்லது. வழக்கு வெற்றி அளிக்கும். வேலைப்பளு அதிகரிக்கும். சிலருக்கு இடமாற்றம் ஏற்படும். ராகு / கேது / சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**சிம்மம் :** பணக் கஷ்டம் இருக்காது. வியாபாரத்தில் நல்ல தருணம் ஏற்படும். கணவன், மனைவி விட்டுக்கொடுத்து அனுசரித்துப் போதல் நலம். மனக் கலக்கம்

# நடக்குமென்பார்; நடக்கும்!

விலகும். சிலருக்குப் புதிய வேலை வாய்ப்பு வந்து சேரும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். ராகு / கேது / சனி / வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**கன்னி :** எடுத்த காரியம் கைகூடும். மனப் பிரம்மை தீரும். சுப நிகழ்ச்சிகளின் செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். நண்பர், உறவினர்கள் மூலம் ஆதாயம் கிட்டும். பிள்ளைகளால் சந்தோஷம் ஏற்படும். பணப் பிரச்னை இருக்காது. வேலையில் புதிய மாற்றம் ஏற்படும். குரு/ சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**துலாம் :** சுபநிகழ்ச்சி நிறைந்த வாரம். தெய்வ பிரார்த்தனைகள் நிறைவேறும். பூர்வீகச் சொத்து பாதுகாப்பாக இருக்கும். புதிய தொழில் முயற்சி பலன் அளிக்கும். வீடு/மனை வழியில் ஆதாயம் கிட்டும். செலவுகள் பயனுள்ளதாக இருக்கும். கல்வி வளம் மேலோங்கும். செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். ராகு / கேது வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**விருச்சிகம் :** மன அமைதியான வாரம். எண்ணங்கள் யாவும் ஈடேறும். உடல் ஆரோக்கியம் நன்றாக இருக்கும். இல்லற வாழ்வு நன்றாக இருக்கும். வேலைப் பளு அதிகரிக்கும். பணப் பற்றாக் குறை இருக்காது. செலவுகள் கட்டுக்கடங்கி இருக்கும். ராகு / கேது / சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**தனுசு :** உல்லாசப் பிரயாணம் வந்து சேரும். உடல்நிலை சீராகும். கணவன், மனைவி உறவு நன்றாக இருக்கும். எதிர்ப்பு விலகும். தெய்வ பலம் நிறைந்து இருக்கும். உத்தியோகத்தில் நல்ல பெயர் ஏற்படும். சிலருக்கு மக்கள் பாக்கியம் கிட்டும். வழக்கு வெற்றி அளிக்கும். நண்பர், உறவினர் மூலம் ஆதாயம் ஏற்படும். சத்ரு தொல்லை விலகும். குரு வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**மகரம் :** வீடு / மனை வாங்க நல்ல காலம். கல்வியில் அக்கறை எடுத்துப் படிக்கவும். நெருங்கிய கூட்டாளிகளால் சற்று சிரமம் ஏற்படும். எங்கு சென்றாலும் கைப்பொருள் மீது கவனம் தேவை. உணவு விஷயத்தில் கட்டுப்பாடு தேவை. வாக்கு வாதம் தவிர்க்கவும். வேலைப்பளு அதிகரிக்கும். ராகு/கேது/சனி வழிபாடு செய்துவர நற்பலன் உண்டாகும்.

**கும்பம் :** தடை விலகித் திருமணம் கைகூடும். வேலைப்பளு அதிகரிக்கும். இல்லறத்தில் விட்டுக் கொடுத்து அனுசரித்துப் போவது நல்லது. வழக்கு வெற்றி அளிக்கும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். செலவுகள் கட்டுப்பட்டு இருக்கும். ராகு/ கேது/குரு/சனி வழிபாடு செய்து வர நற்பலன் உண்டாகும்.

**மீனம் :** வெளிநாட்டு அழைப்பு வந்து சேரும். தொலைதூரப் பிரயாணம் உண்டு. மனப் பிரம்மை தீரும். கல்வி வளம் மேலோங்கும். பணக் கஷ்டம் இருக்கும். செலவுகள் சுபமானதாக இருக்கும். பூர்வீகச் சொத்துக்கள் வந்து சேரும். சிலருக்கு வீடு மாற்றம் ஏற்படும்.

**தஞ்சை பரத்வாஜ்**

# காதலுக்கும் கத்திரிக்காய்க்கும் என்ன

● ஜெகா, கும்பகோணம்

*AIDS - இதைத் தூய தமிழில் எவ்வாறு கூறுவது?*

'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்று செல்லும் இடத்தில் சர்வ அலட்சியமாக இருந்து விடாதீர்கள். 'தீதும் நன்றும் பிறர் தர வாரா' என நம்மை எச்சரிக்கிறார் சங்கத் தமிழ்ப் புலவர் கணியன் பூங்குன்றனார். AIDS வலியச் சென்று நாம் பெறும், பிறர் தரும் தீது... இது ஒரு தீவிர - வியாதி. AIDS எனும் இந்த ஆங்கில அமங்கலத்துக்குத் தூய தமிழில் எதற்கு அலங்காரம்? தமிழைப் போல தூய்மையாக இருந்தால் AIDS வரவே வராது. நார்மன் - கஸின்ஸ் என்பவர் நகைச்சுவைப் படங்களைப் பார்த்து, தமக்கு வந்த 'பார்கின்ஸன் நோய்' என்னும் இடுக்கண்ணை நகுக செய்து, நகருக என்றாராம். தமிழுக்கு அமுதென்று பேர். சிரஞ்சீவித்தனம் அளிக்கவல்ல கம்பன், வள்ளுவன், இளங்கோவின் தமிழ் அமிர்தத்தை தாராளமாகப் பருகுங்கள். நார்மன்-கஸின்ஸ் நகைச்சுவையால் நோயை விரட்டியதுபோல, அப்படி ஒருவேளை AIDS வந்துவிட்டால், தமிழ்ச் சுவையில் திளைத்து, அதை வெல்லுங்கள். மேலும் AIDS இறக்குமதியான அயல்நாட்டு சீமைச் சரக்கு... Foreign AIDS. வெள்ளையனை விரட்டியதுபோல, இந்தப் பிணியனை வெளியேற்றி நமது வருங்காலச் சந்ததிக்கு விடுதலை வாங்கித் தருவோம்.

● என்.கோமதி, நெல்லை

*நா-நயம், நாணயம் இந்த இரண்டில் கிரேஸியைக் கவர்ந்தது எது?*

பகவான் ரமண மகரிஷியின் 'நான் I am...'

● கா.சங்கர், விழுப்புரம்

*படிக்காத மாணவர்களுக்கு வாத்தியார் முட்டை போடுவது எதைக் குறிக்கிறது?*

குரு. அதாவது வாத்தியார், முட்டை போட்டுப் படிக்காத மாணவனை 'குரு முட்டை' என்று சொல்லாமல் சொல்கிறார்!

● எஸ்.ஜானகி, உடுமலைப்பேட்டை

*காதலுக்கும் கத்திரிக்காய்க்கும் என்ன சம்பந்தம்...?*

காதல் என்னும் காய் கல்யாணத்தில் முடிந்தால் பழமாகிறது. 'சீச்சி இந்தக் காய் புளிக்கும்' என்று சம்பந்தப்பட்ட காதலர்களோ அல்லது 'பழ'மைவாதிகளான பெற்றோர்களோ, பழுக்கும் முன்பே கத்திரித்துவிட்டால், காதல் கத்திரிக்காய் போலச் சூம்பி வாடி வதங்கிவிடும்.

● ரஞ்சனி, டெல்லி

*வீடு வரை உறவு, வீதி வரை மனைவி, காடு வரை பிள்ளை... கடைசி வரை....?*

கடைசி வரை முதல்... அந்த முதல் கடவுள் என்கிற 'முழு முதலாகவும்' இருக்கலாம்... இல்லை நாம் செய்த பாவ-புண்ணியம் என்கிற 'கொள் முதலாகவும்' இருக்கலாம்.

● க.மோ.சிவா, கிருஷ்ணகிரி

*தர்மம் எப்போது தலை காக்கும்?*

அதர்மம் தலை தூக்கும் போது!

● சூர்யா, சென்னை

*பரமசிவன்*



கிரேஸியை கேளுங்கள்

# சம்பந்தம்?

**● உங்கள் முன் தோன்றி 'ஒரு கோடி ரூபாய் தருகிறேன். ஆனால் ஒரு கண்டிஷன். நீ பெண்ணாகி விடுவாய்' என்கிறார். உங்கள் பதில் என்ன?**

'அரை கோடி வாங்கிக்கொண்டு உன்னைப்போல அர்த்தநாரியாக இருக்க அனுமதிப்பாயா?' என்று பரம சிவனை முதலில் தாஜா செய்ய முயல்வேன். பர'மசியவில்லை' என்றால் பெண்ணாக மாற நாணத்துடன் ஒப்புக்கொள்வேன். என்ன இப்போ... பத்திரிகைகளில் அம்புக் குறியிட்டு மாறுவதற்கு முன், மாறிய பின் என்றெல்லாம் போட்டு என் அந்தஸ்த்தை உயர்த்துவார்கள். டிராமா, சினிமா, டீ.வி. சீரியல் எழுதும் யந்திரம் ஆணாக இருந்தால் என்ன, பெண்ணாக இருந்தால் என்ன... கிரேஸி மோகன் என்ற என் பெயரை ரோஸி மோகினி என்று மாற்றிக்கொள்வேன். ரோஸியைக் கேளுங்கள் என்ற (புடைவைத்) தலைப்பில் மங்கையர் மலரில் நீங்கள் கேட்கும் கேள்விகளுக்குப் பதில் கூறிக் கொண்டிருப்பேன்.

**● அய்யாறு வாசுதேவன், டிசனனை கல்கியில் தராசுவிடம் கேட்கும் கேள்விகளுக்குப் பரிசு கொடுக்கிறார்கள். உங்களிடம் கேட்கும் கேள்வி எதற்கும் பரிசு தருவதில்லையே. ஏன்?**

தராசில் கேள்விகளை நிறுத்துப் பார்த்து, எடை மிகுந்த கேள்விக்குச் சன்மானம் தருகிறார்கள். நான் உங்கள் கேள்விகளைச் சிரித்துப் பார்த்து, விடை தெரிந்த கேள்விகளுக்குப் பதில் சொல்லி என் தன்மானத்தை காப்பாற்றிக் கொள்கிறேன். நியாயமாகப் பார்த்தால் நல்ல பதிலை வரவழைத்த கேள்வியைக் கேட்பவர், பரிசை எனக்குத் தர வேண்டும்!

ங்கள்



''உம்...உம்...''

சகாதேவனின் ஆசீர்வாதம் இது தான். அக்காக்காரி சக்கு நொடித் தாள்.

''ஏண்டா... 'நல்லாயிரு'ன்னு வாயைத் திறந்து வாழ்த்த மாட்டியா...? தாய்மாமனா லட்சணமா செய்யற ஆசீர் வாதமாடா இது...''

''அக்கா... அவரைப் பத்தித்தான் உங்களுக் குத் தெரியுமே... நாளைக்குக் கச்சேரி இருக்குதில்லே... அதான்...''

சகாதேவனின் மனைவி, கணவனுக் காக ஒருபுறம் பரிந்து கொண்டே, வெற்றி லைப் பாக்குத் தட்டில் பட்டுப் புடைவையும் பணமுமாக வைத்து, புதுமணத் தம்பதியிடம் கொடுத்தாள்.

இன்னிக்கு நேத்திக்கு இல்லே... எப் பவுமே இப்படித் தான்...''

சக்கு அலுத்துக் கொண்டாலும், தம்பி பெண்டாட்டி மாலதியின் உபசாரத்தில் மனம் குளிர்ந் தாள் என்றுதான் சொல்ல வேண்டும்.

மாலையும் கழுத்துமாய் மாலதி அந்த வீட்டு மரு மகளாய் வந்த அன்றிரவே, சகாதேவன் மனைவியிடம் சொன்னதுதான்.

''இதப்பாரு... நான் வயலின் வித்வான். எப்ப வேணுமானாலும் வயலினை எடுத்து வச்சிட்டு உட்கார்ந்

காதல், முள்ளில்லாத ரோஜாக்களை மட்டுமே பார்க் கிறது...

- ஜெர்மன் பழமொழி

''மாமா... ஆசீர்வாதம் பண்ணுங்க...''

சகாதேவனின் அக்காள் மகன், தன் புது மனைவியுடன் அவரது கால்களில் விழுந்தான்.

# உள்ளே ஒரு

அனுராதா ரமணன்

துடுவேன். ஆனா, எப்பவாவதுதான் பெண்டாட்டி ஞாபகம் வந்து....''

'போதும்' என்பதுபோல, கணவரின் வாயைப் பொத்தினாள் அவள்.

அவளது கரத்தை மெல்ல ஒதுக்கிவிட்டு சகாதேவன் சொன்னார்,

''எனக்குள்ள ஒரு வயலின் இருக்கு. கொஞ்சம் அபஸ்ருதி பேசினாலும்... உள்ளாரயே இருக்கு. அதை நகர்த்தினாத்தான் மனசு பூரணமா உன் பக்கம் திரும்பும்.. மோகனன் அண்ணன் ஏதாவது சொன்னாரா...''

'சொன்னார்' என்பதுபோலத் தலையசைத்தாள் மாலதி.

சகாதேவன், வாசற்பக்கமுள்ள ஜன்னல் வழியாக வெளியே பார்த்தார்...

மாடிக்கு யாரோ வடக்கத்தி குடும்பம் குடி வருகிறதுபோல. தாடிக்காரன் ஒருவன், தனி ஆளாகச் சாமான்களைத் தூக்கிக் கொண்டு மாடிக்கு ஓடிக் கொண்டிருந்தான்.

''இங்கேயெல்லாம் டபுள் பெட்ரூம் ஃப்ளாட்டு என்ன வாடகை..? ஒரு அஞ்சாயிரத்துல இருந்தாச் சொல்லேன்..''

''அஞ்சாயிரத்துக்கு ஏது ரெண்டு பெட்ரூம் ஃப்ளாட்டு சக்கு அக்கா... எட்டாயிரம் போகுது...''

''லேய்... அங்கே என்ன பார்வை... மாடிக்குக் குடிவர்றாங்க... அவ்வளவு தானே... என்னாமோ மர்லின் மன்றோ வந்துட்டாப்பலப் பார்க்கறே...''

சகாதேவன் திரும்பிப் பார்த்தார். மோகனன்தான்... நண்பனை ஓரக்கண்ணால் பார்த்து விஷமமாய்ச் சிரித்தார்.

அது... எல்லாம் தெரிந்த சிரிப்பு. சகாதேவனின் வயலின், ஆனந்த அருவியாகப் பொங்கிப் பிரவாகிக்கும்போது, 'சட்'டென கொட்டைப் பாக்கைக் கடித்தாற்போல ஓர் அந்நிய ஸ்வரம் பேசும்...

''லேய்... என்ன லேய்... உன்னோட மனசுக்குள்ள இருக்கற பிடிலைத் தூக்கிப் போடுலேய்... இல்லே, அதையும் சுருதி சுத்தமா வாசிக்கச் சொல்லு...''

இப்படி உரிமையோடு அதட்ட, அவருக்கு மட்டுமே உரிமை உண்டு.

சகாதேவனின் மனசுக்குள் பல வருடங்களுக்கு முன்பு, திருச்சி - தில்லை நகரில் அவர் வசித்த வீட்டின் மாடிக்கு ஒரு தேவதை குடிவந்த நாள்தான் பசுமையாக...

பாவாடை தாவணி விசிற, காதிலுள்ள ஜிமிக்கி - அடிக்கடி அவளின் கன்னத்தை முத்தமிட, அடர்த்தியான இரட்டைப் பின்னலும், அதில் பட்டாம்பூச்சி போலப் படபடக்கும் மிட்டாய் கலர் ரிப்பனும்...

''வாசல்ல என்னடா பார்வை? பாடத்தைக் கவனி...''

சகாதேவனின் அப்பா அதட்டினார். வயலினின் வில்லால், மகனின் தொடையைக் குத்தினார்.

''ஸ்ரீ கண நாத ஸிந்தூரா வர்ண...''

வயலின் திரும்பத் திரும்ப இதையே இழைக்க, சகாதேவனின் மனசு, புதுப் பல்லவி பாடியது:

''மா... டிக்கு வந்த... பொண்ணு பேரென்ன...''

பதினாறு வயசுப் பையனுக்கு, பிள்ளையாரின் ஸிந்தூர வர்ணத்தில் புத்தி போகவில்லை என்பதும், மாடி வீட்டுப் பெண்ணின் கன்னச் சிவப்பிலும், மிட்டாய் கலர் ரிப்பனிலுமே அவன் மனம் ஊசலாடிக் கொண்டிருக்கிறது என்பதும் வயலின் மேதையான அப்பா சாமிநாதனுக்குத் தெரியாது...

''பேரு வஞ்சுளா... எங்க காலேஜ்தான். ஃபர்ஸ்ட் இயர் படிக்கறா. திருச்சிக்குப் புதுசாம்.''

சக்குதான் ஒப்பித்தாள்.

சகாதேவனின் ஆசைக் குளத்தில் கல் விழுந்தது.

''பார்த்தா பத்தாவது படிக்கிற மாதிரி இருக்கா... காலேஜா?''

''டான்ஸ் கத்துக்கறாளாம். சைக்கிள்லேதான் காலேஜுக்குப் போயிட்டு வர்றா... உடம்பை பிடில் வில்போல வச்சிருக்கா. இல்லாட்டி, நம்ம வீட்டு அரிசி மூட்டைக்

# வயலின்!

காதல் பொன்மொழிக் கதை-10

கணக்கா இருந்தா எப்படி?''

சகாதேவனின் தங்கை அமுதாதான் சொன்னது. 'அரிசி மூட்டை' என்கிற செல்லப் பெயர் சக்குவுக்கு. அவள் தங்கையைப் 'பிடிபிடி'யெனப் பிடித்ததும், அம்மா வந்து இரண்டு பேர் முதுகிலும் நாலு சாத்து சாத்தியதும்... அந்த நேரம் பார்த்து, வஞ்சுளா வாசலில் வந்து நின்றதும்...

''என்ன...''

சக்குதான் காரமாகக் கேட்டாள். சகாதேவன் படபடக்கும் இதயத்துடன் அந்தப் பெண்ணையே பார்த்தபடி...

''காலேஜ்லே முதல் வருஷமாமே? அப்ப என்னை விடவும் மூணு வயசு பெரியவ...''

''அதனாலே என்னடா? கஸ்தூர்பா காந்தி, அவங்க வீட்டுக்காரர் மகாத்மா காந்தியவிட ரெண்டு வயசுப் பெரியவங்களாம். என்ன குறைஞ்சு போச்சு?''

''அய்யோ... எத்தனை அழகு...''

சகாதேவனுக்குத் தன் கையிலிருந்த வயலினைக் கீழே வைத்துவிட்டு, அவளைத் தூக்கி, தன் மடி மீது இருத்தி, அவளது முகத்தைத் தன் தோள் மீது சாய்த்து அழுத்திக் கொள்ள வேண்டும்போல...

'ஸரிக ஸரி ஸரி... ஸரிகம...'

'ச்சீ... தப்பு...'

எண்ணங்கள் குதியாட்டம் போட்டன.

அவள் பாட்டுக்கு வந்தாள். சாமிநாதனை விழுந்து கும்பிட்டாள். ஏற்கெனவே கொஞ்சம் வர்ணம் பாடமாகியிருப்பதாகப் பாடிக் காட்டினாள். குரல் மெல்லிசு. கர்நாடக சங்கீதத்துக்கு ஏற்ற கனமோ, அழுத்தமோ, கார்வையோ இல்ல. சக்கு, மறைந்திருந்து பழிப்புக் காட்டினாள். கடைசியாக வஞ்சுளா ஒரு புது வயலினுடன் வந்து உட்கார்ந்தாள்.

**மோகனன் கரிநாக்குக்காரன். சகாதேவன் பள்ளிப் படிப்பை முடிக்கும் முன்பே, வஞ்சுளா குடும்பம் மாற்றலாகிப் போய்விட்டது!**



இளம் வயது விரோதங்கள் எல்லாம் வெகுநாட்கள் நீடிப்பதில்லை. அன்றைக்கு முறைத்த சக்கு, அப்புறம் இவளுடைய தோளில் கைபோட்டபடி, மலைக்கோட்டைக்கும் ஸ்ரீரங்கத்துக்கும் திருவானைக் காவுக்கும் போய் வந்தாள். அவர்கள் வசித்த தில்லை நகர் வாலிபப் பசங்க அத்தனை பேருமே சகாதேவனைப் பொறாமைப் பொங்கப் பார்த்தனர்.

இத்தனை ஏன், சகாதேவன் படிக்கும் பள்ளியின் இறுதி வகுப்பில் படிக்கும் மோகனன்கூட வஞ்சுளாவுக்கு ஒரு காதல் கடிதம் எழுதி, அதை சகாதேவனிடமே கொடுத்தும் அனுப்பினான்:

''லேய்... ப்ளீஸ்... எனக்காகக் கொண்டு கொடுடா...''

அப்பொழுது எத்தனை எரிச்சல் மண்டிக் கொண்டு வந்தது சகாவுக்கு?

'உனக்காகவா... நீ என்ன என் அம்மாவுக்குக் காய்கறிப் பை சுமந்தாயா? அப்பாவுக்கு விசிறிக் கட்டையால் முதுகு சொறிந்து விட்டாயா? அல்லது என் வீட்டில் குடுமிப்பிடிச் சண்டை போடும் என்கூடப் பிறந்த பெண்களுக்குப் பதிலாக இட்லிக்கு மாவாட்டினாயா...'

- இப்படி நீளமாய் வசனம் பேச சகாதேவனுக்கு ஆசைதான். ஆனால், மோகனன் திடகாத்திரன். அறைந்து விட்டால்? அதனாலேயே வாய் திறவாமல் கடிதத்தை வாங்கிய சகாதேவன், மோகனன் தலை மறைந்ததும், கடிதத்தைச் சுக்கல் சுக்கலாகக் கிழித்துப் போடத் தவறவில்லை.

ஆனால், இதற்குப் பிறகு அடிக்கடி சகாவைத் தேடி வீட்டுக்கு வர ஆரம்பித்த மோகனனின் கண்கள் வஞ்சுளாவைத் தேடி வலை வீசின.

சில நாட்கள் எத்தனை நேரம் பழி கிடந்தாலும் அவள் கிடைக்க மாட்டாள். சகாதேவனுக்கு மோகனனின் முகத்தைப் பார்க்கப் பார்க்கச் சிரிப்பு பொங்கி வழியும்.

''லேய்... அந்த லெட்டரைக் கொடுத்துட்டே இல்லே?''

''ஓ...''

''பின்னே என்னலேய் பதிலையே காணோம்? 'தனி' ஆவர்த்தனமாவே போயிடும் போல...''

சில நேரங்களில் சகாதேவனே, வஞ்சுளாவுக்குப் பாடம் நடத்தும் பாக்கியமும் கிடைக்கும்.

''இந்தா... எதுக்குப் பூனை மாதிரி

வயலினை வெச்சிட்டுப் பிராண்டறே...''

''அய்யே... உனக்கு வயலினே வராது... சும்மா ஃபோட்டோவுக்குப் போஸ் கொடுக்கற மாதிரி உட்காரத்தான் லாயக்கு.''

- இப்படி அவன் சொல்லச் சொல்ல, அவள் பொய்க் கோபத்துடன், கையிலிருக்கும் வில்லினால் அவனுடைய தலையில் அடிப்பாள்.

இதெல்லாம் மோகனனுக்குப் புரியாதா என்ன... படிப்பில்தான் சோடையே தவிர, கணக்குப் போடுவதில் புலி!

''எலேய்... என்ன லேய்... ரெண்டு பேரும் சங்கேதமாப் பேசிக்கிறீங்க...''

''சேச்சே...''

''பின்னே... லேய்... சத்தியமாச் சொல்றேன்லே... அந்தப் பொண்ணு உனக்கும் கிடைக்காது...''

ஏதோ ஆவேசம் வந்த மாதிரி சொன்னான்; கரிநாக்குக்காரன். சகாதேவன் பள்ளிப் படிப்பை முடிக்கும் முன்பே, வஞ்சுளா குடும்பம் மாற்றலாகிப் போய்விட்டது.

அன்றைக்குத்தான் சகாதேவன் மேடையில் முதல் தடவையாக வயலினுடன் உட்கார்ந்தது. பெரிய பாடகர்.. மிருதங்கத்துக்கு முத்துசாமி, தன் மகன் மோகனனை அனுப்பி வைத்திருந்தார்.

இப்பொழுதுகூட மோகனன், சில சமயங்களில் பழைய நாட்களை நினைத்துச் சிரிப்பார்.

''ஞாபகமிருக்கா சகா... முதல் கச்சேரி... எப்பேர்பட்ட சதஸ்... எப்படியாப்பட்ட வித்வான். நீயும் நானுமானா - தேவதாஸ் கணக்காப் போய் உட்கார்றோம். நான், என் ஆத்திரத்தை எல்லாம் மிருதங்கத்து மேலக் காட்டினேன். நீயானா - நீத்தார் தினத்துக்குத் துக்கம் அனுஷ்டிக்கற மாதிரி கீ...கீ...ன்னு அழுதே... வித்வான் கோவத்துல தில்லானா கூடப் பாடாம எழுந்துட்டாரே...''

மோகனன், உடனேயே தன் மனசை வஞ்சுளாவிடமிருந்து எடுத்ததும் இல்லாமல் தன் அத்தை மகளையே மணந்தாலும்... ஐந்தாறு வருடங்கள்போல காவி நிற ஜிப்பாவும் தாடியும் துளசி மணிமாலையுமாய் அலைந்த சகாதேவனுக்கு, தன் ஒன்றுவிட்ட தங்கையையே மணமுடித்து வைக்கத்தான் ரொம்பவும் சிரமப்படவேண்டியிருந்தது.

ஆனால்... சகாவின் உள்ளே இருக்கும் வயலினை... அவ்வப்போது அபஸ்வரம் பேச வைக்கும் இசைக் கருவியை... தூக்கி எறியத்தான் முடியவில்லை அவரால்.

மாலதி பொறுமைசாலி... புருஷனின் குணம் தெரிந்து நடந்துகொள்கிறாள்.

மாடி வீட்டில் சந்தோஷ ஆரவாரம்...

''அரே... ஆியே... ஆியே... வஞ்சு... இதர் தேகோ...''

மாடி 'லிஃப்ட் அவுட்'டிலிருந்து ஒரு வடக்கத்திப் பெண் கத்த 'சட்'டென ஆட்டோ நிற்க, அதிலிருந்து இறங்க மாட்டாமல் இறங்கினாள் நாற்பது வயதுப் பெண்மணி.

செக்கச் சிவக்க, பழுத்து வெடித்து விடுவதுபோல... கையில்லாத 'ரவிக்'கும், ஷிபான் புடைவையும், கத்தரித்து விட்ட தலைமுடியில் சிவப்பும் நீலமுமாய் ஏதேதோ வர்ணமும், உதட்டில் பளீரிட்ட லிப்ஸ்டிக்கையும் தாண்டி...

'வஞ்சுளாவா?'

'வஞ்சுளாவேதானா...'

மோகனன் மட்டுமல்ல. சகாதேவனும் ஜன்னல் கம்பிகளை இறுகப் பற்றியபடி வெளியே நெட்டுக்குத்தாய் பார்வையைச் செருகியிருந்தார்.

"மூளையிருக்கா உங்களுக்கு? ஆட்டோவுல ஏறப்பவே நான் என்ன சொன்னேன்? 'பேசிக்குங்க'ன்னு சொல்லலே? சரி...சரி...ன்னு செம்மறியாடு மாதிரி தலையை ஆட்டிட்டு..."

"வஞ்சு... ப்ளீஸ்... கத்தாதே... மாடியில இருந்து உன் ஃப்ரெண்டு பார்க்கறா பாரு..."

"அவளுக்குத் தமிழ் தெரியாது. தெரிஞ்சாத்தான் என்ன... உங்க சமர்த்து அவளுக்கும்தான் தெரியட்டுமே."

மேலேயும் பேசியிருப்பாள். அதற்குள், சக்கு அவளை அடையாளம் கண்டுகொண்டு விட்டாள்.

"வஞ்சுளா... நீயா..."

'விருட்'டெனத் திரும்பிய வஞ்சுளாவின் முகத்தில் முதலில் அதிர்ச்சி. பின் சமாளித்துக்கொண்டே புன்னகை.

"நீ எங்கே இங்கே..."

"இது என் தம்பி - அதான் சகாதேவன் வீடு. உனக்கு மோகனனைத் தெரியுமோ? மிருதங்க வித்வான் முத்துசாமியோட பையன். அவனோட தங்கையத்தான் சகாதேவனுக்குக் கட்டிக் கொடுத்திருக்கு. என்ன நீ... ஆளே அடையாளம் தெரியாதபடி... உள்ளே வாயேன்."


'விருட்'டெனத் திரும்பிய வஞ்சுளாவின் முகத்தில் முதலில் அதிர்ச்சி. பின் சமாளித்துக் கொண்டே புன்னகை!


அதற்கு அவள் என்ன சொன்னாளோ... அதையெல்லாம் கவனிக்கும் நிலையில் இருவரும் இல்லை.

சகாதேவன், மோகனனின் கரத்தை இறுகப் பற்றிக்கொண்டார்.

"இன்னிக்குக் கச்சேரியில அபஸ்மாரம் இருக்காது அண்ணே..."

மோகனன், உள்பக்கம் தன் தங்கையிடம் உற்சாகம் பொங்கக் கட்டளையிட்டார்:

"அம்மாடீ... சர்க்கரை கொஞ்சம் தூக்கலாப் போட்டு ரெண்டு காஃபி கொண்டா..."

# கலைஞரோடு ஐக்கியமாகி விட்டேனா?

## மனம் திறக்கிறார் ஜக்கி

இரண்டரைக் கோடி மரங்கள் நடுவதற்கான துவக்க விழா சென்னையில் சிறப்பாக முடிந்த நிலையில், சத்குரு ஜகி வாசுதேவைச் சந்தித்து நமது எண்ணங்களைப் பகிர்ந்து கொண்டோம்.

**மதங்களை வளர்ப்பதற்குப் பதில் மரங்களை வளர்ப்போம் என்று முதல்வர் உங்கள் விழாவை அரசியலாக்கிவிட்டாரே...**

''முதல்வரின் கருத்தில் நான் முதல் பகுதியையும் வரவேற்கிறேன். என்னுடைய கேள்வியெல்லாம் மதங்களை பரப்ப வேண்டிய அவசியம் என்னவென்பதுதான். அது நமது கலாசாரமல்ல. உலக மக்களையெல்லாம் தங்கள் மதத்துக்குக் கொண்டு வர வேண்டும் என்ற பேராசையில் இங்கே படையெடுத்த சில அந்நிய சக்திகளால் வந்த கலாசாரம் அது. உங்களுக்குத் தேவையென்றால் மதத்தோடு ஒன்றியிருங்கள்; தேவையில்லையெனில் விட்டுவிடுங்கள். மதம் வளர்ப்பது, மரம் வளர்ப்பது இரண்டு விஷயங்களையும் தொடர்புபடுத்திப் பார்க்க வேண்டியது இல்லை. மதம் தொடர்பான நடவடிக்கைகளில் ஈடுபடுகிறீர்களோ இல்லையோ, கட்டாயம் மரம் நடுங்கள். கடவுள் இல்லாமல்கூட வாழ்ந்து விட முடியும்; ஆனால் காற்று, நீர் மற்றும் உணவின் ஆதார ஸ்ருதியாக விளங்கும் மரங்கள் இல்லாமல் வாழ முடியுமா? இது ரொம்ப அடிப்படையான விஷயம். மனித வாழ்க்கைக்கு ஆதாரமாக இருப்பவற்றை வழிபடும் கலாசாரம் நம்முடையது. ஒன்றை நாம் தெரிந்துகொள்ள வேண்டும். ஆன்மிகத்துக்கும் மதத்தைப் பரப்புதலுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை.''



**மரம் நடுவதுடன் சமூகத் தீமைகளான பெண் சிசுக் கொலை, மதுவின் கொடுமை குறித்தும் நீங்கள் மக்களிடம் விழிப்புணர்வை உண்டாக்கலாமே?**

''மனிதனுக்கு மிகவும் அவசியமான காற்று, நீர், உணவு ஆகியவற்றின் அடிப்படையாக விளங்கும் மரங்கள் நடுவதில் கவனம் செலுத்துவதால் மற்ற கோணங்களைக் கவனிக்காமல் இருக்கிறோம் என்பது பொருளல்ல. ஈஷாவோடு தொடர்புடையவர்கள் அனைவருமே, மனித உயிரை மதிப்பவர்களே தவிர ஆண், பெண் என்று பேதம் பார்ப்பதில்லை. இன்று ஈஷாவின் இளைஞர் பட்டாளம் நூற்றுக்கணக்கான கிராமங்களில் இந்த நோக்கில் பிரசாரம் செய்து வருகிறது. ஒரு தாயோ, தந்தையோ, தமக்குப் பிறக்கும் பெண்

குழந்தையை ஏன் கொல்ல நினைக்கிறார்? அதை வளர்த்து ஆளாக்குவதில் உள்ள பொருளாதார பிரச்னைதான். பிரச்னையின் வேர் என்பது பொருளாதாரம்தான். வறுமையை ஒழிக்கும் முயற்சி வெற்றி பெற்றால் இந்தச் சீர்கேடுகள் தானாக ஒழியும். எங்களுக்கு இருக்கிற நிதி ஆதாரத்தின் அடிப்படையில், நாங்கள் எல்லாச் சவால்களையும் ஒரே நேரத்தில் சந்திக்க முடிவதில்லை.''

**சேதுக் கால்வாய் திட்டம், அரசியல் சகதியில் மாட்டிக் கொண்டுள்ளதே!**

''சேதுக் கால்வாய் மட்டும்தானா? டைட்டானியம், சிங்கூர் (மேற்கு வங்காளம்) என்று எல்லா இடத்திலும் சுய லாப அரசியல் புகுந்துகொண்டு தேச வளர்ச்சிக்கு முட்டுக்கட்டைகள் போடப்படுகின்றன. அரசியல் கட்சிகள் இந்த விவகாரத்தில் ஏன் மூக்கை நுழைக்க வேண்டும்? இங்கே எல்லாவற்றிலும் அரசியல் புகுந்துகொண்டு ஆட்டி வைக்கிறது. எந்த ஒரு உருவாக்கப்பட்ட அமைப்பு ஒன்று சேது கடலில் இருப்பதாக நிபுணர்கள் சொன்னால், அதைப் பாதுகாப்பதைப் பற்றி யோசியுங்கள். பாரம்பரியமும் - பழம்பெருமையும் காப்பாற்றப்பட வேண்டுமென்பதில் இருவேறு கருத்துகள் இல்லை. மக்கள் ஆதரவில்லையானால் எந்தத் திட்டமும் சாத்தியம் இல்லை. பெரும்பான்மையான மக்கள் பல காரணங்களுக்காக ஒரு திட்டத்தை வேண்டாம் என்று நிராகரிக்கும்போது அரசு மட்டும் என்ன செய்ய முடியும்?''

**சென்ற வருடம் கலைஞரால் துவங்கப்பட்டு எட்டரை லட்சம் மரக் கன்றுகள் நட்டீர்கள். இப்போதும் மறுபடி அவரையே அழைத்திருக்கிறீர்கள். தமிழக அரசியல் நாகரிகம் மாசு பட்டிருக்கும் நிலையில் ஒரு தலைவரோடு ஐக்கியப்படுத்திக்கொள்வது ஈஷாவின் எதிர்காலத்துக்கு நல்லதா?**

''எந்த ஒரு தலைவரோடும், கட்சியோடும் நான் என்னை ஐக்கியப்படுத்திக் கொள்வதாக நினைக்கவில்லை. நான் ஜனநாயகத்தை மதிக்கிறேன். அந்த அடிப்படையில் முதல்வராக இருப்பவரை நான் கௌரவிக்கிறேன். அதில்



**"நான் ஜனநாயகத்தை மதிக்கிறேன். அந்த அடிப்படையில் முதல்வராக இருப்பவரை கௌரவிக்கிறேன்!"**

வளர்ச்சித் திட்டமாக இருந்தாலும் சரி; மூன்று கோணங்களில் பாருங்கள். சுற்றுச்சூழல், பொருளாதாரம் மற்றும் பழம் பெருமை - பாரம்பரியம் இதற்கெல்லாம் நிபுணர்கள் இருக்கிறார்கள். அவர்கள் சொல்வதைக் கேளுங்கள். மக்களின் உணர்வுகளைக் கிளப்பிவிட்டுத் தெருவில் போராட வேண்டாம். அங்கே தீர்மானிக்க வேண்டியது அல்ல இது. இதைத் தேர்தல் பிரச்னையாக்க வேண்டாம். மனிதனால் என்ன தவறு? இதே ரீதியில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு பஞ்சாயத்துத் தலைவரையும் நான் மதிப்பேன். ஜனநாயத்தில் தேர்ந்தெடுக்கப் பட்டவர்களை நாம் மதிக்கக் கற்றுக் கொள்ள வேண்டும். பண்பாடு, நாகரிகம் மாசுபட்டிருப்பின் அதைப் போக்க வேண்டியது மீடியாவின் கடமையல்லவா! என் இந்த அணுகுமுறை எதிர்காலத்திலும் தொடரும்.''

– ப்ரியன்

ஆஸ்திரேலியாவுக்கு எதிரான செமி ஃபைனல் மேட்ச், கடைசி ஓவர். ஜொகிந்தர் சர்மா பந்து வீசுவதற்குத் தயார். எதிரணிக்கு இருபது சொச்சம் ரன்கள் வேண்டியிருந்தது. சர்மாவிடம் சென்று பேசினார் டோனி, ''உனக்கு எப்படி விருப்பமோ அதுபோல பந்து வீசு. நீ லோக்கல் மேட்சுகளில் தாதா. அது போன்றதொரு மேட்ச்தான் இது. இந்த ஓவரினால் ஆட்டத்தின் முடிவு எப்படித் திரும்பினாலும் எனக்குக் கவலை கிடையாது.''

பாகிஸ்தானுக்கு எதிரான ஃபைனல் மேட்சின் இறுதி ஓவரில், ஜொகிந்தர் சர்மாவை ஏன் பந்து வீச அழைத்தீர்கள் என்கிற கேள்விக்கு டோனியின் பதில் : ''ஹர்பஜன் சிங்குக்கு யார்க்கர்கள் சரியாக வரவில்லை. அவர் நூறு சதவிகிதம் பவுலிங் போடத் திணறுகிறபோது என்னால் ஜொகிந்தர் சர்மாவைத்தான் அழைக்க முடிந்தது. தோற்றுப் போயிருந்தாலும் என் முடிவுக்காகக் கவலைப்பட்டிருக்க மாட்டேன்.''



இரண்டு மேட்சுகளிலும் இந்தியா வெற்றி பெற்றது. 20-20 உலகக் கோப்பையை வென்றது.

**ரா**குல் டிராவிடம் எல்லோரும் கண்ட ஒரு குறை, அழுத்தமான முடிவுகள் எடுப்பதில் எப்போதும் அவர் பின் தங்கியே இருந்தது. இங்கிலாந்துடனான நான்காவது ஒரு நாள் போட்டியில் இங்கிலாந்தின் ஏழு விக்கெட்டுகள் வீழ்ந்த பின்னும், ஸ்பின்னர்களைத் தொடர்ந்து பந்து வீசச் செய்து இந்தியாவைத் தோல்வியடையச் செய்தார் டிராவிட். அன்றே ஒரு நாள் தொடரைத் தவறவிட்டது இந்தியா.

20-20 உலகக் கோப்பை இன்று இந்தியா வசம். 1983 உலகக் கோப்பையை இந்தியா வென்றதைப் பார்க்காதவர்களே இன்று மிகுந்து இருக்கிறார்கள். சச்சின், டிராவிட், கங்குலி ஆகிய மூவரும் ஒரு முறையாவது இந்தியாவுக்கு உலகக் கோப்பையைப் பெற்றுத் தருவார்கள் என்கிற ஆசை ஒவ்வொரு முறையும் தவிடுபொடியானது. கபில்தேவ் அணியால் உலகக் கோப்பை வெல்ல முடியும் என்று, அன்று ஒருவர்கூட நினைக்கவில்லை. டோனி குழாம் தென் ஆப்பிரிக்கா சென்றபோதும் இதே மனநிலைதான் எல்லா ரசிகர்களிடமும் இருந்தது.

டிராவிடம் இல்லாத சில குணங்கள் டோனியிடம் தென்படுகின்றன. முக்கியமாக வீரர்களிடம் நம்பி முழுமையாகப் பொறுப்புகளை ஒப்படைப்பது. இந்தியாவின் பலம் பவுலிங்கில் உள்ளது என்பதைக் கண்டுபிடித்து, அதற்கேற்ப காய்களை நகர்த்தியது. கங்குலியிடம் இருந்த ஒரு வெறியை இப்போது டோனியிடமும் காண முடிகிறது. ஆட்டத்தின் போக்கைக் கிரகித்துக்கொள்ளும் சக்தியை ஒவ்வொரு சந்தர்ப்பத்திலும் கற்றுக்கொண்டார் டோனி. செமி ஃபைனலின்போது க்ரிக் இன்ஃபோ இணையதளத்தில் ஆஸ்திரேலியா ஜெயிக்கும் என்று ரவிசாஸ்திரி கணித்தார். இதனால் எழுந்த கோபத்தையே எருவாக மாற்றி ஜெயித்துக் காண்பித்தார் டோனி. முக்கியமாக அணித் தேர்வில் இரக்கம், பரிவு, பச்சாதாபம் ஆகிய உணர்ச்சிகள் அவரிடமிருந்து எப்போதும் வெளிப்பட்டதில்லை.

'அகர்கரை யாராவது வீட்டுக்கு அனுப்புங்களேன்' என்று எல்லோரும் அழாத குறையாகச் சொல்லிப் பார்த்துவிட்டார்கள். ஆனால், அணியின் மூத்த வீரர் என்கிற பாதுகாப்பான தகுதியோடு அவர் தொடர்ந்து ஆடிக்கொண்டிருந்தார். மேலும் 20-20 உலகக் கோப்பையின் முதலிரண்டு ஆட்டங்களில் வழக்கம்போல ரன்களை வாரி வழங்கிக் கொண்டிருந்தவரை, டோனி அடுத்த மேட்சிலிருந்து அணியின் பக்கமே சேர்க்கவில்லை. இங்கிலாந்து டூர் முழுக்க இந்திய அணியோடு பயணித்தார் மும்பையைச் சேர்ந்த பத்தொன்பது வயது வீரரான ரோஹித் சர்மா. டிராவிட் அவருக்கு ஒரு வாய்ப்புகூட






வழங்க மறுத்தார். அவரால் தினேஷ் கார்த்திக்கைத் தாண்டி யோசிக்க முடியாமல் போனது. ஆனால், 20-20 அணியில் தேர்வான 99 சதவிகித வீரர்களுக்கும் வாய்ப்புகள் வழங்கினார் டோனி. தொடர்ந்து ஆடுவதற்கான சந்தர்ப்பங்களை ரோஹித் சர்மாவுக்குக் கொடுத்து, அணியின் பலங்களில் ஒன்றாக அவரை மாற்றினார். வாய்ப்புகளைத் தொடர்ந்து வீணடித்துக் கொண்டிருந்த தினேஷ் கார்த்திக்கின் கழுத்தில் கத்தியை வைத்தார். அதே சமயம் வீரர்களிடம் கண்டிப்பு காண்பிக்காமலும் இல்லை. ஸ்ரீசாந்த் தவறான நடத்தைகளுக்காக அம்பயர் முன்னால் நின்றபோது, அவருக்காக வக்காலத்து வாங்காமல், செய்த தவறுகளை நாலு பேர் முன்னால் கண்டித்தார் டோனி.

டிராவிட்டுக்குப் பிறகு சேவாக் கேப்டனாகும் வாய்ப்புகள் இருந்தன. ஆனால், அவரால் அணியில் நீடித்து நிலைக்க முடியவில்லை. அதிர்ஷ்டக் காற்று யுவராஜ் பக்கம் திரும்பும் என்று எதிர்பார்க்கப்பட்டது. யுவராஜின் நடத்தையில் சில கோளாறுகள் உண்டு. அவரால் அணியைச் சீராக வழிநடத்த முடியுமா என்கிற சந்தேகம் எழுந்தது. இதன் பிறகு டோனி கேப்டன் ஆவதை யாராலும் தடுக்க முடியாமல் போனது. இதனால் யுவராஜுக்கு நிறைய மனத்தாங்கல்கள். ''என் மகன் நீண்ட காலமாக ஆடி வருகிறான். அவனை கேப்டனாக்காதது குறித்து எல்லோருக்கும் வருத்தம். நிச்சயம் அவன் ஒரு நாள் இந்திய அணியின் கேப்டன் ஆவான்'' என்று யுவராஜின் தந்தை பேட்டிகள் கொடுக்க, நிலைமை மேலும் மோசமானது. ஆனால், மைதானத்தில் எந்த அதிர்வுகளையும் காண முடியவில்லை. 'யுவராஜை எந்த ஒரு வீரராலும் இடம் பெயர்க்க முடியாது. எனது அணியின் முக்கியமான வீரர்' என்று ஈகோ பாராமல் யுவராஜுக்கு முக்கியத்துவம் கொடுத்தார் டோனி. விளைவு - இயல்பாக எழும்பும் வருத்தங்கள், பொறாமைகள் ஆகிய




✱ உலகக் கோப்பை வென்ற வெற்றிக் களிப்பில் இந்திய அணி...

எல்லாவற்றையும் மூட்டை கட்டிவிட்டு அணிக்காக உயிரைக் கொடுத்து ஆடினார் யுவராஜ் சிங். ஒரே ஓவரில் ஆறு சிக்ஸர்கள் அடித்து உலக சாதனை செய்தார். பி.சி.சி.ஐ.யிடமிருந்து இதற்காக ஒரு கோடி ரூபாயைப் பெற்றுக்கொண்டார்.

டோனி, யுவராஜ் எனும் இரட்டைக் குழல் துப்பாக்கி, இந்தியர்களின் இதயம் கவர்ந்திருந்தாலும் இந்த 20-20 உலகக் கோப்பை என்பது அரையாண்டுப் பரீட்சை மட்டுமே. வரவிருக்கிற ஆஸ்திரேலியா மற்றும் பாகிஸ்தானுடனான தொடர்கள் தான் இவர்களின் அக்னித் தேர்வுகள்.

இளைஞர்களின் ஆதிக்கம் என்பது எல்லா துறைகளிலும் சாத்தியமாவதில்லை. உதாரணம் இந்திய அரசியல். ஆனால், கிரிக்கெட்டுக்கு எப்போதும் புதிய ரத்தம் பாய்ச்சுபவர்களாக இளைஞர்கள் இருக்கிறார்கள். ரோஹித் சர்மா, உத்தப்பா, கம்பீர், ஆர்.பி.சிங், ஜொகிந்தர் சர்மா போன்ற வீரர்கள் பெரும் போர்களுக்கு அணிவகுக்கும் பண்புகளைக் கொண்டிருக்கிறார்கள். டெண்டுல்கர், கங்குலி, டிராவிட் ஆகிய மூன்று ஜாம்பவான்களும் ஓய்வு நிலையை அடையும்போது, இந்திய கிரிக்கெட் ரசிகர்களின் எதிர்பார்ப்புகளைப் பூர்த்தி செய்ய புதிய படை ஒன்று தயாராகவே இருக்கிறது. ●

சுதா சேஷய்யன்

பூமியின் குறுக்கே நெடுக்கே கோடுகள் ஓடுவதாக நாம் பூகோளத்திலே கணக்குக் கொள்கிறோம். லாடிடியூட், லாஞ்சிடியூட் என்று இவற்றைச் சொல்கிறார்கள். இந்தக் கோட்டில் ஒரு புள்ளியைத்தான் 'கிரீன்விச் மீன் டைம்' என்று காலப் புள்ளியாகக் குறித்து, மெரிடியன் என்று குறிப்பிடுகிறோம். இந்தப் புள்ளியிலிருந்து ஆரம்பித்து கிழக்குத் திசையிலே பத்து டிகிரி, இருபது டிகிரி என்று போய்க் கொண்டேயிருந்தால், அது எங்கே போய் நிற்கும்...? 180 டிகிரி கிழக்கில் போய் நிற்கும். மேற்கு நோக்கிப் போனால், அதுவும் 180 டிகிரி மேற்கில் போய் நிற்கும். ஆனால், இந்த இரண்டு 180 டிகிரிகளுமே ஒரே புள்ளிதான்! கிழக்கும் மேற்கும் வெவ்வேறு திசைகளாக இருந்தாலும், அவை இரண்டுமே மீண்டும் புறப்பட்ட இடத்துக்குத்தான் வந்து சேர்கின்றன!

அதே மாதிரிதான் அம்பாளைக் குறிக்கும் முற்றிலும் மாறான திருநாமங்களும் -

நிர்மதா என்று சொல்கிறபோது, மதமே இல்லாமல் இருக்கக் கூடியவள் என்று பொருள். அவளே மதநாசினியாகவும் இருக்கிறாள் - முழுக்க முழுக்க மமகாரத்தில் அகங்காரத்தில் இருக்கக் கூடிய ஜீவன்களுடைய அகங்காரத்தையும் மமகாரத்தையும் நாசம் செய்து, அவர்களை மேலே ஏற்றக்கூடியவளாக இருக்கிறாள்.

## துர்கா

இப்படி அம்பாளின் திருநாமங்கள் தொடர்ந்து வந்து, 190-வது திருநாமமாக அமைவது துர்கா. துர்கா பரமேசுவரி என்றே சொல்வதுண்டு. மலைமகளாக இருக்கக்கூடிய பரமேசுவரியின் நாமம் துர்கா.

துர்கா என்கிற வார்த்தைக்கு என்ன அர்த்தம்?

அம்பிகை என்பது ஓர் அர்த்தம்.

பழங்காலத்துக் கோட்டைகளை துர்கம் என்று குறிப்பிடுவார்கள் - அவற்றின் பெயர்கள் 'துர்கம்' 'துர்கம்' என்று முடியும். ஆந்திராவில் நிறைய துர்கம் இருக்கும்.

சம்ஸ்கிருதத்தின் பல சொற்கள் ஆந்திரத்திலும் தமிழ்நாட்டிலும் காணப்படும். தமிழ்நாட்டில் இல்லாத சில சொற்கள் கூட ஆந்திரத்தில் உண்டு. சங்கிரி துர்கம் - என்பது அங்கிருக்கும் கோட்டையின் பெயர். ஆக, துர்கம் என்றால் பாதுகாப்பு; பாதுகாப்பைத் தரக்கூடிய இடம். ஆகவே, துர்கா பாதுகாப்பைத் தரக்கூடியவள்.

துர்காவாக இருக்கக் கூடியவள், இங்கே இருக்கிற ஜீவன்களுக்குப் பாதுகாப்பைத் தரக்கூடியவள். என்னவெல்லாம் பிரச்னைகள் வந்தாலும், அவற்றிலிருந்து ஜீவன்களைக் காப்பாற்றி மேலே ஏற்றக் கூடியவள் அவள் - எனவே

# அரணாகக் காப்பவள்!

துர்கா.

## சுகமும் துக்கமும்

அப்படி துர்காவாக இருக்கக் கூடியவள் **துக்கஹந்த்ரீயாக** இருக்கிறாள் - துக்கத்தைப் போக்குபவள். **சுகப்பிரதா** - சுகங்களைத் தரக்கூடியவள்.

**துஷ்டதூரா** - இந்தத் திருநாமத்திலிருந்து ஆரம்பித்து சுமார் முப்பது திருநாமங்கள் ரொம்ப எளிமையான திருநாமங்கள். அவரவர் அனுபவத்திலே, ஏதாவது ஒரு கட்டத்திலே இந்தத் திருநாமங்கள் சொல்லக்கூடியவற்றை நிச்சயமாக அனுபவித்திருக்க முடியும். அப்படிப்பட்ட எளிமையான திருநாமங்கள்.

துஷ்டர்களுக்கு எட்டாத தூரத்தில் இருக்கக் கூடியவள் - (துஷ்டதூரா) யார் சரியாக இல்லையோ அவர்களுக்கு நெருக்கமாக அவள் இருப்பதில்லை.

பகவானைப் பற்றிப் பாடுகிறபோது மாணிக்கவாசகர் சொல்லுவார்: யார் யார் வணங்கி, அவனிடம் கைகூப்பி நிற்கிறார்களோ, அவர்களுக்கு அணுக்கமாக இருக்கக்கூடிய தெய்வம். அதே சமயத்தில், யார் கரத்தைக்கூட கூப்பாமல் ரொம்ப அகங்காரமாக இருக்கிறார்களோ, அவர்களுக்கு ரொம்ப தள்ளி இருக்கக்கூடிய தெய்வம் - என்பார்.

தெய்வத்தினுடைய தன்மையே என்னவென்றால், இரண்டு எல்லைகளிலும் குணம் படைத்திருக்கும். அப்படியே எதிர்மறையான இரு குணங்கள்! - ஒரே தெய்வம்தான், ஒரே பகவான் தான், ஒரே பரமாத்மாதான்.

அம்பாளும் யார் துஷ்டத்தனம் செய்கிறார்களோ அவர்களிடமிருந்து தள்ளி இருப்பாள். யார் அந்த துஷ்டத்தனம் இல்லாது இருக்கிறார்களோ, அவர்களுக்காகப் பக்தி வசப்பட்டு, அந்தப் பக்திக்காக அவர்கள் பக்கத்திலேயே இருக்கக் கூடியவள் - அதுதான் துஷ்டதூரா!

## சமன் செய்யும் தேவி

துராசார சமனி - துர் ஆசார சமனி!



துராசாரம் என்றால், செய்யத்தகாத ஒன்றைச் செய்வது. ஆசாரம் என்பது முறையான செயலை முறைப்படி செய்வது. சிலவற்றைச் செய்ய வேண்டும்; சிலவற்றைச் செய்யவே கூடாது என்று விதி முறைகள் உண்டு. இதை இதைச் செய்ய வேண்டும் என்று சொல்வது போதாது. ''இதை இதைச் செய்யக்கூடாது!''என்றும் சொல்வது மிக முக்கியம். அப்படிச் சொல்லவில்லையானால், செய்யக்கூடாததைச் செய்துவிடும் ஆபத்து இருக்கிறது. இவற்றைத்தான் விதி, நிஷேதம் என்று குறிப்பிடுவார்கள். விதி - எதை, எப்படி, எப்போது செய்ய வேண்டும் என்று தெரிவிப்பது. நிஷேதம் - இது ஒதுக்கப்பட வேண்டியது; தள்ளப்பட வேண்டியது என்று கூறுவது.

அப்படி நிஷேதமாக இருக்கக்கூடியவற்றை நாம் சில சமயம் செய்துவிடக் கூடும்; ஒரு வேளை பிராரப்த கர்மத்தினால் செய்யலாம் அல்லது முன் பிறவியிலேயே செய்திருக்கலாம்; தெரியாது. அந்த மாதிரி பக்தர்கள் துராசாரமாக நடந்திருந்தால்கூட, நிஷேதனமானவற்றைச் செய்திருந்தால் கூட, அதனால் பாவம் வரும் அல்லவா...? அந்தப் பாபத்தையும் போக்கக் கூடியவள்;

சரிசெய்யக் கூடியவள் **துராசார சமனி.** அந்தப் பாபங்களைச் சமன்படுத்தக் கூடியவள்!

எப்போது அந்த மாதிரி சமன் செய்கிறாள்...? பக்தியோடு போய் காலிலே விழுந்தால் சமன் செய்கிறாள். ஒரு வேளை தெரிந்தோ தெரியாமலோ செய்திருக்கக்கூடிய தவறுகள் இருந்தால் அவற்றினால் ஏற்படக்கூடிய பாபங்களைத் தீர்க்க வேண்டினால் சமன் செய்கிறாள் - துராசார சமனி.

### கடைக்கண் கருணை

**தோஷ வர்ஜிதா** - தோஷமில்லாமல் இருக்கக் கூடியவள். துளியும் தோஷங்களின் சம்பந்தமே இல்லாதவள்.

**சர்வக்ஞா** - எல்லாவற்றையும் அறிந்தவள்.

**சாந்த்ர கருணா** - அதிகமான கருணை கொண்டவள். கருணை என்றாலே விசேஷம். ''அம்மா! என்னிடம் கருணை காட்டு'' என்று அம்பாளிடம் கேட்கிறபோதே எப்படிக் கேட்போம்? ''கடைக்கோடி பார்வையைக் கொடு'' என்றுதான் கேட்போம். ''கடாக்ஷம் வேண்டும்'' என்போம். கடாக்ஷம் என்றால் கடைக்கோடி பார்வை - அக்ஷம் (கண்ணின்) கடைசியில்(கட) இருக்கிற பார்வை - என்றுதான் அர்த்தம். முழுசாகக் கண்ணைத் திறந்து பார்ப்பது கடைக்கோடி பார்வை அல்ல. அம்பாளின் கிருபா கடாக்ஷம் இருந்தால் போதும். அவள் நம்மை முழுதாகப் பார்க்க வேண்டும் என்று அவசியமே இல்லை! அந்தக் கடைக்கோடி பார்வையே நம்மைக் கடைத்தேற்றி விடும்!

அம்பாளின் கடைக்கோடி பார்வையே நம்மை கடைத்தேற்றி விடும்.

அம்பாள், நாம் கொஞ்சமாகக் கேட்டாலும், கேட்டதைவிட மிக அதிகமாகக் கொடுக்கக் கூடியவள். அதனால்தான் **சாந்த்ர கருணா!** மிகுந்த கருணை உடையவள் அவள். இது தெரிந்ததனால்தான் பாரதி, ''அதிக வரம் பெறலாம்' என்றார். சாந்த்ர கருணை - மிக அதிகமான கருணை.

### சர்வத்திலும் சர்வம்!

அடுத்து வேறொரு திருநாமம், அவள் சமானமும் அதிகமும் இல்லாமல் இருக்கக் கூடியவள் என்று கூறுகிறது. **சமான அதிக வர்ஜிதா.** ஒப்பாரும் மிக்காரும் இல்லை என்று சொல்கிறோமே - அப்படி அம்பாளுக்கு நிகரும் மிகையும் இல்லை.

**சர்வ சக்தி மயி** - எல்லாவிதமான சக்திகளையும் தன்னிடத்தில் கொண்டவள்.

**சர்வ மங்களா** - எல்லாவிதமான மங்களங்களையும் தன்னிடத்தில் உடையவள்.

**சத்கதி ப்ரதா** - பக்தர்களுக்கு நல்ல கதியை வழங்கக்கூடியவள்.

**சர்வேசுவரியாக** இருக்கக் கூடியவள் - எல்லாவற்றுக்கும் தலைவி.

**சர்வமயி** - சகலமுமாக இருக்கக் கூடியவள். பார்க்கக்கூடிய அண்ட - பிரும்மாண்டம் எல்லாமே அம்பாள்.

இப்படிப் பார்க்கிற முறை இருக்கிறதே, அது தான் **சர்வமயி** என்கிற முறை. எல்லாமாக, எல்லாவற்றுக்குள்ளும் இருக்கக்கூடியவள், அவற்றுக்கான ஆற்றலையும் கொடுக்கக்கூடியவள் அம்பாள்.

**ஸர்வமந்த்ர ஸ்வரூபிணி** - எல்லா மந்திரங்களுக்குள்ளேயும் உறைபவள்.

**ஸர்வயந்த்ராத்மிகா** - மந்திரங்களோடு தொடர்புடைய யந்திரங்களின் ஆத்மாவாக இருக்கக்கூடியவள். அதே சமயத்தில்... **தந்திர ரூபா.** மந்திர தந்திரம் என்று சொல்வோமே - அந்தத் தந்திரங்களின் ரூபமாக இருப்பதோடு தந்திரங்களால் ஆராதிக்கப்படக்கூடியவள். தந்திரம் என்றால் விசேஷமான ஆராதனை முறைகள்.

**மனோன்மணி** - இந்தத் திருநாமம் ரொம்ப விசேஷமான அர்த்தங்களை உடையது.

*(வளரும்)*

# வீரப்பன் வரலாறு

* விஷம சீரியல்!

● பி.தேவி, பாபநாசம்

*? மூக்குத்தி அணிந்து வந்தாரென்று லண்டன் விமான நிலையப் பணியாளரை பணி நீக்கம் செய்தது குறித்து...?*

! அவர் மூக்குத்தி அணிவது குறித்து எவ்வித ஆட்சேபணையும் இல்லை. ஆனால், பணியிடத்தில் கடைப்பிடிக்க வேண்டிய விதிமுறைகள் உள்ளன. அவை அங்கு பணியாற்றும் அனைவருக்கும் பொது. அந்த விதிமுறைகளில் உடை, ஆபரணங்கள் பற்றிய கட்டுப்பாடுகளும் உள்ளன. அதை மீறுவதுதான் குற்றம். உலகெங்கிலும் இத்தகைய கட்டுப்பாடுகள் உண்டு.

● சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி ★

*? மேட்டூரில் ஒரு வாரத்தில் விற்க வேண்டிய மது, விநாயக சதுர்த்தியை யொட்டி ஒரே நாளில் விற்றுத் தீர்த்தது (டாஸ்மாக் கடையில்) என்ற செய்தியால் அறியப்படுவது என்ன?*

! இந்தப் பண்டிகை வெறும் கேளிக்கையாக மாறிக் கொண்டிருக்கிறது என்பது அறியப்படுகிறது. சென்னையில் நடைபெற்ற விநாயக சதுர்த்தி ஊர்வலத்தில் குத்துப்பாட்டுக்கு நடனம் ஆடியதும் இதையே காட்டுகிறது. ஹிந்து மதம் சார்ந்த அமைப்புகளின் தலைவர்களும் மடாதிபதிகளும் இதைப் பார்த்துக்கொண்டு சும்மா இராமல், நல்ல அறிவுரை வழங்குதல் அவசியம்.

● ஜி.மாரியப்பன், சின்னமனூர்

*? மாவீரன் வீரப்பன் என்ற பெயரில் மக்கள் தொலைக்காட்சியில், வீரப்பனின் வரலாற்று சீரியல் ஒளிபரப்பாகவுள்ளது பற்றி...?*

! சமுதாயத்தில் நஞ்சைக் கலக்கும் மாபெரும் விஷமம். மக்கள் டி.வி பெற்றுள்ள நற்பெயர் மாசுபடுத்தப்படுகிறது.

● ஜே.துரைராஜ், சென்னை - 116

*? மிட்டே பத்திரிகை ஆசிரியர், பதிப்பாளர், ரெசிடன்ட் ஆசிரியர் மற்றும் கார்டூனிஸ்ட் ஆகியோர் நீதிமன்றத்தை அவமதித்ததற்காக டெல்லி உயர்நீதிமன்றம், நான்கு மாதச் சிறைத் தண்டனை விதித்துள்ளதே...? நீதிமன்றங்கள் விமர்சனத்துக்கு அப்பாற்பட்டவையா?*

! தீர்ப்புகளை விமர்சிக்கலாம்; ஆனால் நீதிபதிகளை அவதூறுக்கு உள்ளாக்கி விமர்சிக்கக் கூடாது. 'ஆதாரங்களுடன்தான் குற்றச்சாட்டுகளை நீதிபதி மீது சுமத்தினோம்' என்கிறார்கள் அந்தப் பத்திரிகையாளர்கள். நீதிமன்றம் ஏற்கவில்லை. மேல்முறையீடு செய்யலாம். ஆனால், பத்திரிகையாளர்கள் தீர்ப்பை எதிர்த்து ஆர்ப்பாட்டம் செய்வது அழகல்ல.

● க.நா.இராஜேஸ்வரன்,
மொரட்டுப்பாளையம்

*? 'ராஜாஜி தமது ராமர் பற்றிய நூலில் ராமர் தொடர்பான சம்பவங்கள் எல்லாம் உண்மையில் நடந்தவை என்று எழுதவில்லை' என கருணாநிதி ராமர் பற்றிய தமது கருத்துகளுக்கு ராஜாஜியை ஆதாரவாகச் சேர்த்துக் கொண்டிருக்கிறாரே?*

! ராஜாஜி மதுவிலக்கை அமல்படுத்தினார். கருணாநிதி அதை ரத்து செய்தார். இன்னும் எத்தனையோ கூறலாம். தமக்கு ஆதரவாக ராஜாஜியை இழுப்பதும், தேவை

## தராசு நீங்கள் கேட்டவை

திட்டத்துக்குள் திட்டம்!

# சீரியல் ஆகிறதே...?

யில்லாதபோது உதறுவதும் அவருக்கு வாடிக்கை. ராமன் என்கிற உத்தமனும் ராமராஜ்யம் என்கிற அற்புதமும் இந்தியாவின் ஆதர்சங்கள். இதை ராஜாஜியும் நம்பியதால் தான் ராமாயணத்தை எளிமைப்படுத்தி எழுதினார்.

● ஏ.சுகுமார், காட்டுக்காஜனூர்

*? கலைஞர் டீ.வியில் பொன்னியின் செல்வன் சீரியல் வரப்போகுதாமே?*

! அப்படியா? அது வெற்றிபெற வேண்டுமானால் வந்தியத்தேவனுக்கு நிகரான ஒரு சாகஸ டைரக்டர் தேவை. தனாதிகாரி பழுவேட்டரையருக்கு நிகரான ஒரு புரொட்யூசர் தேவை. ரசிகர்களின் எதிர்பார்ப்பு ஏராளமாய் இருக்கும்! முயற்சி திருவினையாக வாழ்த்துக்கள்.

● லலிதா செல்லப்பா, சென்னை

*? சன் டீ.வி. நிறுவனம் டி.டி.எச்.நேரடி ஒளிபரப்பை ஆரம்பித்து, இலவச டிஷ், இலவச பாக்ஸ் வழங்கிக் குறைந்த கட்டணத்தில் ஒளிபரப்பை வழங்குவதில் என்ன சார் தப்பு? அதற்கு ஏன் இவ்வளவு எதிர்ப்பு?*

! கேபிள் ஆபரேட்டர்களுக்குத் தங்கள் பிழைப்பில் மண் விழும் என்கிற அச்சம்தான். இப்போது சன், தமிழக அரசு ஆகிய இருவரைக் காட்டிலும் குறைந்த விலைக்கு சேனல்களை வழங்க கேபிள் ஆபரேட்டர்கள் குழுமமே இறங்கி வந்துவிட்டதே!

● ஏ.மகேஸ்வரி, மதுரை - 4

*? 'பள்ளிகளில் மாணவர் சேர்க்கையின்போது ஜாதியைக் குறிப்பிட வேண்டும் என்பதைப் பள்ளி நிர்வாகம் வற்புறுத்தக் கூடாது' என்று சுப்ரீம் கோர்ட் தெரிவித்துள்ளது பற்றி...?*

! 'கூடாது' என்பதற்கும் வற்புறுத்தக் கூடாது என்பதற்கும் வித்தியாசம் நிறைய உண்டு. அரசு கொள்கை அளவில் ஜாதிகளிடையே பேதப்படுத்துகிறபோது உச்சநீதி மன்றத்தின் இந்த ஆணை, நடைமுறையில் அர்த்தம் பெறாது. பொருளாதார அடிப்படையிலான ஒதுக்கீடுக்கு மாறுவது மட்டுமே உதவும்.

● பி.இராஜேந்திரன், லோயர் அணைக்கட்டு

*? விஜயகாந்தைவிட நடிகை நமீதாவுக்குத்தான் அதிக*



தள்ளும் குறள்!





கூட்டம் கூடும் என்று விஜய டி.ராஜேந்தர் கூறியுள்ளதைப் பற்றி..?

! பண்பாடற்ற பேச்சு இது. இதன் மூலம் நமீதாவை விஜய டி.ராஜேந்தர் எப்படிப் பார்க்கிறார் என்பதே வெளிச்சமாகிறது.

● எஸ்.முரளி, குறிஞ்சிப்பாடி

*? ஆந்திராவில் பெண் தொண்டர்களுடன் சென்று நடிகை ரோஜா போராட்டம் நடத்தி, கள்ளச்சாராயக் கடைக்குள் புகுந்து பாட்டில்களை அடித்து நொறுக்கினாராமே...?*

! அடக் கடவுளே! ராமதாஸ் கூட குடித்துவிட்டு வரும் கணவனைத்தானே அடித்து நொறுக்கச் சொன்னார்! இது போன்ற வன்முறை அணுகுமுறைகள் பயன்தரவே மாட்டா. இதே ஆந்திராவின் நெல்லூர் மாவட்டப் பெண்களின் அமைதிப் போராட்டம், இதே விஷயத்தில் வெற்றி பெற்ற வரலாறு உண்டு.

● பா.கணேசராஜா, அலிவலம்

*? பெங்களூரில் கலைஞர் மகன் செல்வி வீட்டில் நடந்த தாக்குதல் குறித்து?*

✱ வெளிச்சமாகும் விகாரம்!



❒ ரூ.100/- பரிசு பெறுபவர்:

உமரி பொ.கணேசன், மும்பை - 37

✱ ரூ.50/- பரிசு பெறுபவர்:

சி.ஆர்.நாகராஜன், பொள்ளாச்சி

● த.சத்தியநாராயணன், அயன்புரம்

*? பெங்களூரில் தமிழக பஸ் எரிக்கப்பட்ட சம்பவம் குறித்து?*

! கண்டனத்துக்குரியது. இவ்வாறு உணர்ச்சிவசப்பட்டு தப்பு காரியங்கள் செய்ய வைக்கும் முறையில் கருணாநிதியின் பேச்சுக்கள், அறிக்கைகள் அமைந்தது தவறு. ஆயினும் ஒரு தவறு, இன்னொரு தவறை நியாயப்படுத்தி விடாது.

● எச்.ஆன்டனி தமிழரசன், மும்பை

*? மும்பையில் விநாயகரை வழிபட்டதற்காக ஹிந்தி நடிகர் சல்மான்கானுக்கு இஸ்லாமிய அமைப்பு ஒன்று ஃபத்வா பிறப்பித்துள்ளதே - இது சரியா?*

! குறுகிய சிந்தனையின் வெளிப்பாடு. விசேஷ நாட்களில் ஹிந்துக் கடவுளர் ஊர்வலம் வரும்போது, முஸ்லிம்களும் மரியாதை செலுத்துவதென்பது மத ஒற்றுமையை வலியுறுத்தியபடி காலம் காலமாக இந்நாட்டில், பல ஊர்களிலும் இருந்து வரும் மரபுதான்.

● உமரி பொ.கணேசன், மும்பை - 37 ❒

*? 'பாகிஸ்தானுக்கு மீண்டும் அதிபரானால் தளபதி பதவியை விட்டுவிடுவேன்' என்று முஷாரஃப் கூறுகிறாரே, நம்பலாமா?*

! நம்பலாம். பாகிஸ்தான் அதிபர் பதவியின் அதிகாரங்கள், ராணுவத் தளபதியின் அதிகாரங்களைக் கட்டுப்படுத்தும், நிர்ணயிக்கும் என்பதால், அதிபராகத் தேர்வாகவில்லை என்றால், ராணுவத் தளபதி என்ற முறையில், ராணுவப் புரட்சி செய்து உடனடியாக மீண்டும் ஆட்சியைக் கைப்பற்றி, ராணுவ ஆட்சி நடத்தலாம் என்பது அவர் திட்டம்.

● ஜெயலக்ஷ்மி சேஷாத்ரி, கும்பகோணம்

*? கரிகாலன் கட்டி வைத்தான் கல்லணை. அதை எந்த இன்ஜினீயர்கள் கட்டினார்கள்? அவர்கள் எந்த காலேஜில் படித்தார்கள்?*

! பல பேர் இந்தக் கேள்விகளைக் கேட்டு விட்டார்கள்; பதில்தான் கிடைக்கவில்லை, கருணாநிதியிடமிருந்து. 129வது குறளுக்கு உரை எழுதிய கருணாநிதி, குறைந்தபட்சம் நாவினால் சுட்டதற்கு வருத்தமாவது தெரிவிக்கலாம்.. மறுக்கிறார்! ●

சூப்பர் விற்பனையில்...

# கோகுலம்

அக்டோபர் 2007 விலை ரூ.8/-

குழந்தைகளின் குதூகலம்!

## ஆஹா!

படித்து ரசிக்கவும்... பார்த்து வியக்கவும்...

புதுமைப் படக்கதை

## நான்தான் ராஜா!



விளையாட்டுச் சிறப்பிதழ்!

## வெல்கம் 08:08:08

பிரித்து...மடித்து...

கத்தரித்து...

இணைத்தால்...

மினி

## கோகுலம்

உங்கள் குழந்தையே தயாரிக்கலாம்!



“உலகத்துலயே சிறந்த விஷயம் பசியோடு இருக்கறவங்களுக்கு ஒரு கவளம் சோறு தர்றதுதான். நான் அதையே தொழிலா எடுத்துக்கிட்டதுல ரொம்ப சந்தோஷமா இருக்குங்க'' என்கிறார் அதியமான். கடந்த பதினைந்து வருடங்களாக சினிமாவில் உணவு பரிமாறும் புரொடக்ஷன் டிபார்ட்மெண்ட்டில் பணிபுரிபவர்.

''சினிமாவுல கதை பண்ணி, டைரக்டராகணும்னு மிகப்பெரிய கனவோடுதான் நான் சென்னைக்கு வந்தேன். ஆனா சினிமா என்னைப் புரட்டிப் போட்டு அடிச்சிடுச்சு. ஒண்டிக்க நிழல் வேணுமே... அதுவும் சினிமாவா இருந்தா போதும்னு பாசில் சார் ஆபீஸ்ல வேலைக்குச் சேர்ந்து, அவங்க கம்பெனி படங்களுக்கு புரொடக்ஷன் அசிஸ்டெண்டா வேலைக்குப் போனேன். பொதுவாக எங்க வேலைல கிரியேட்டிவிட்டி இருக்காது. ஆனா சவால் இருக்கும். பலபேரை கிரியேட்டிவா திங்க் பண்ண உதவுறதுகூட நாங்கதான்னு பெருமையா சொல்லலாம். சாப்பாடு சரியா இல்லைன்னா எப்படி அவங்களால கிரியேட்டிவா யோசிக்க முடியும்? என்ன, நான் சொல்றது சரிதானே!'' என்று சிரித்துக் கொண்டே கேட்கிறார் அதியமான்.



“சம்பந்தப்பட்ட சினிமா கம்பெனியோட புரொடக்ஷன் மேனேஜர்தான் புரொடக்ஷன் ஆட்களுக்கு ஹெட். நாளைக்கு ஷூட்டிங்னா இன்னைக்கே மெஸ் ஏற்பாடு பண்ணி, என்னென்ன ஐட்டம் வேணும்னு அவர் சொல்லி வெச்சிடுவார். புரொடக்ஷன் ஆட்கள் காலைல மூணு மணிக்கெல்லாம் எழுந்து மெஸ்சுக்குப் போய் காலை டிபன், டீ,

# திட்டினாலும் தித்திக்கும் சொற்கள்!



காஃபிய வண்டில ஏத்திக்கிட்டு ஷூட்டிங் ஸ்பாட்டுக்குப் போய் விநியோகிப்போம். இதே மாதிரிதான் மத்தியானமும் சாயங்காலமும். ரெண்டே வரில இப்படிச் சுலபமா சொல்லிடலாம். ஆனா, வேலை ரொம்பக் கஷ்டமுங்க. சாப்பாடு, குழம்பை வண்டில ஏத்தறது பெரிய விஷயம்னா, அதை அலம்பாம பத்திரமா கொண்டு வந்து சேர்க்கறதுக்குள்ள எங்க தாவு தீர்ந்துடும். நேரத்துக்குள்ள வந்து பசி தீர்க்கணும். இல்லன்னா எத்தன பேர் சாபத்தை வாங்கணும் தெரியுமா? டிராஃபிக் ஜாம் ஆயிருக்கும், மெஸ்ல லேட் ஆகியிருக்கும்... அட, எங்களுக்கே கூட ஏதோ ஆக்ஸிடெண்ட் ஆகியிருக்கும்... அதையெல்லாம் யாரும் பெருசா எடுத்துக்க மாட்டாங்க. அவங்களுக்கு நேரத்துக்குச் சாப்பாடு இருக்கணும். இல்லைன்னா ரகளைதான்.

ஒருமுறை இப்படித்தான் ஆகிப் போச்சு. ஒரு பிரபல ஹீரோ மதியம் பன்னிரண்டு மணிக்குத்தான் ஷூட்டிங்குக்கு வந்தார். பயங்கர லேட். ஆனாலும் எதுவும் சொல்லாம ஷூட்டிங் நடந்தது. மதியச் சாப்பாடு கொண்டு வந்தோம். அவருக்கும் கொடுத்தோம். அவர் வீட்ல சாப்பிட்டுட்டு வந்ததால 'என் சாப்பாட்டை அப்படியே வெச்சுடுங்க. அப்புறம் சாப்பிட்டுக்கறேன்'னார். நாங்களும் அப்படியே வெச்சுட்டோம். அங்க யாரோ 'ஏதோ டிபன் பாக்ஸ் இருக்கே'ன்னு திறந்து பார்த்திருக்காங்க. காரணம் சொல்லப்பட்டதும் மூடி வெச்சிட்டிருக்காங்க. நாங்க ஈவ்னிங் டிபன், ஸ்நாக்ஸ் ரெடி பண்ண ஸ்பாட்லருந்து கிளம்பிட்டோம். மூணு மணி போல ஹீரோ சாப்பாடு கேட்க, எடுத்துத் தந்திருக்காங்க. அவர் 'இதுல கை வெச்சிருக்கு. வேண்டாம். வேற கொண்டு வாங்க'ன்னு சொல்லியிருக்கார். அங்க வேற சாப்பாடும் இல்ல. புரொடக்ஷன் மேனேஜருக்குத் தகவல் போக, அவர் புரொடக்ஷன் ஆட்கள குறிப்பா என்னைக் கூப்பிட்டுக் கண்டபடி திட்டிட்டார். ஆனா எங்களுக்கு உறைக்காது; உறைக்கக் கூடாது. திட்டினாலும் தித்திக்கிற மாதிரி நிப்போம். இல்லன்னா வேலை போயிருமே! இதுக்கு இடையில சாப்பாடு இல்லேன்னு ஹீரோ ஷூட்டிங்கை கேன்சல் பண்ணிட்டுக் கிளம்ப, அப்புறம் எல்லாரும் சேர்ந்து





**இங்க புரொடக்ஷன் ஆட்களா இருக்கற பலபேர் இந்த வேலை செய்ய வந்தவங்க இல்ல. அவங்களோட கனவே வேற.**

அவரைச் சமாதானப்படுத்தி இருக்காங்க.

இது இப்படின்னா, இன்னொரு முறை சாப்பாடு லேட்டா போனதால அடிதடியே ஏற்பட்டிருக்கு. ஆனா அதே நேரத்துல புரிஞ்சுக்கறவங்களும் இருக்கத்தான் செய்றாங்க. சிலர் எந்த ஐட்டம் நாங்க கொண்டு வரலியோ அதைத்தான் குறிப்பிட்டுக் கேட்டு வம்பு இழுப்பாங்க. சிலர் எதுவும் ஸ்பெஷலா இல்லாட்டியும் அமைதியா சாப்பிட்டுட்டுப் போவாங்க. ஹீரோ, ஹீரோயின் பொதுவா வீட்டு சாப்பாட்டைத்தான் சாப்பிடுவாங்க. ஆனா எல்லாரோடும் கலந்து யூனிட் சாப்பாடு சாப்பிடுற ஹீரோ, ஹீரோயினும் உண்டு. தயாரிப்பாளர், டைரக்டர், கதாநாயகன், கதாநாயகி இவங்களுக்குத் தனியா ஸ்பெஷலா கொண்டு வருவோம். மத்தவங்களுக்கு முன்னதுலருந்து ஒண்ணு ரெண்டு ஐட்டம் குறைச்சலா கொண்டு வருவோம். அவங்கவங்க டீம் தனித் தனியா உட்கார்ந்து சாப்பிடுவாங்க. லேட் ஆக ஆக ஒவ்வொரு ஐட்டமா காலியாகும். சீக்கிரம் வந்து சாப்பிடுறவங்க திருப்தியா சாப்டுட்டு 'நல்லாருக்கு'ன்னு வாழ்த்துவாங்க. லேட்டா வந்து வெறும் சாப்பாடு, குழம்பு மட்டும் சாப்பிட்டுத் திட்றவங்களும் உண்டு. கம்பெனியப் பொறுத்துத்தான் அசைவம், சைவம் எல்லாம். வசதியானவங்க தினமும் கறி, முட்டை, பிரியாணின்னு அசத்துவாங்க. சின்ன கம்பெனியா இருந்தா சைவம்தான். வாரத்துல ஒரு நாள் அசைவம் இருக்கும்.

புரொடக்ஷன் வேலைக்கும் யூனியன் இருக்கு. மெம்பரா இல்லேன்னா வேலை செய்ய முடியாது. ஆனா இப்பல்லாம் கம்பெனி ஆட்கள்னு சொல்லிப் பலர் வேலை செய்றதும் உண்டு. யூனியன்ல தெரிஞ்சா சத்தம் போடுவாங்க. புரொடக்ஷன் அஸிஸ்டெண்ட்டுக்கு ஒரு கால்ஷீட் சம்பளம் நூத்தம்பது ரூபா. தினமும் அதிகபட்சம் மூணு கால்ஷீட் வரைக்கும் ஷூட்டிங் இருக்கும். புரொடக்ஷன் சீஃப்புக்கு சம்பளம் கொஞ்சம் அதிகம், அவ்வளவுதான். நல்லா வேலை செஞ்சா புரொடக்ஷன் மேனேஜரே தான் பண்ற அடுத்தடுத்த படங்களுக்குக் கூப்பிட்டு நமக்கு வாய்ப்புத் தருவார். அவுட்டோர்லாம் போனா சம்பளம் கூடுதலா கிடைக்கும். அவுட்டோர்ல நல்ல மெஸ் கிடைக்கலைன்னா, புரொடக்ஷன் மேனேஜரே நல்ல சமையல்காரங்களை ஏற்பாடு பண்ணிக் கையோடு கூட்டிட்டுப் போயிடுவாரு.

இங்க புரொடக்ஷன் ஆட்களா இருக்கற பல பேர் இந்த வேலை செய்ய வந்தவங்க இல்ல. அவங்களோட கனவே வேற. சினிமால ஓர் இயக்குநரா, ஒளிப்பதிவாளரா, ஒரு நடிகரா வர ஆசைப்பட்டு வாழ்க்கையோட சுழல்ல சிக்கிக் கடைசில சாப்பாடு பரிமாறுறவங்களா நின்னுடறோம். சிலருக்குள்ள அந்த வேகம் அப்படியே இருந்து அவங்கள சாதிக்க வெச்சிடுது. அதுக்குச் சிறந்த உதாரணம் தயாரிப்பாளர் தேனப்பன் சார். புரொடக்ஷன்லருந்து மேல வந்த புண்ணியவான் அவர். அவரை ஓர் உதாரணமா வெச்சித்தான் இன்னைக்குப் பலரும் போராடிட்டு இருக்கோம். யார் கண்டது... எங்கள்ல யாரு இயக்குனர் ஷங்கரா வர்றாங்களோ... நடிகர் விஜய்யா வர்றாங்களோ!'' - கனவோடு விரிகிறது அதியமானின் பார்வை.

சந்திப்பு : **மு.மாறன்**

படங்கள் : **பொள்ளாச்சி சந்தரம்**

**க**ல்கி விருது பெற்ற அட்டைப்பட இளைய தலைமுறை ஹோம்லி அண்ட் லவ்லி!

- அ.யாழினி பர்வதம், சென்னை - 78

**பா.**ம.க.வின் மாற்று அபிவிருத்தித் திட்டம் குறித்த தலையங்கம் நிறை - குறைகளை தெளிவாக விளக்கியிருந்தது.

- ஜே.துரைராஜ், சென்னை

**ரா**மதாஸின் கேள்விக்கு தமிழக அரசு பதில் சொல்லட்டும்!

- அன்பாதவன், திருப்பூர்

**மா**ர்பகப் புற்றுநோய் கட்டுரை படித்தோம். இனி கல்கியில் வரும் மருத்துவக் கட்டுரைகளைப் படிக்க வேண்டுமென எங்கள் பெண்கள் குழுவில் உறுதி எடுத்துள்ளோம்.

- பி.கலைச் செல்வி,
எஸ். சரோஜா, அஞ்சலை,
பூமாயி, விழுப்புரம்

**எ**திர்பார்ப்புக்கும் நிதர்சனத்துக்கும் இடையில் வாழ்வின் உன்னதம் கண்ணாமூச்சி ஆடுவதை அழகாய் உணர்த்தியது அம்மா... அக்கா... மாதங்கி!

- என்.கோபாலன், நங்கநல்லூர்,
- வி.ஆர்.ராஜேஷ், சென்னை

**அ**ரசாங்க விருதைவிட மக்களின் ஆதரவுதான் மஞ்சிக்கு மிகப்பெரிய கௌரவம்.

- என்.பாலகிருஷ்ணன்,
மதுரை

**கு**ழந்தையின்மையின் வேதனையை உணர்ந்தவர்கள் 55 வயதில் குழந்தை தேவையா என்று கேட்க மாட்டார்கள்.

- தேவகி, மொரட்டுப்பாளையம்

**எ**தையும் எதிர்பார்க்காத அன்புதான் பக்தி - சுதாசேஷய்யன் விளக்கம் அற்புதம்.

- ஆர்.ராஜாமணி, சென்னை - 88

**ஆ**ன்மிகம் மணக்க மணக்க வரும் ஸ்ரீலலிதா, உள்ளத்தின் ஆழங்களை நிறைக்கிறது.

- சாவித்ரி, மதுரை

### ஸ்பீட் போஸ்ட்

**20**-20 கிரிக்கெட் அனைவரையும் 100-100 ஆட்கொண்டது.

- சொ.சுப்பராமன், உறையூர்

**வி**ஜயகாந்தும் சரத்குமாரும் சேர்ந்திருப்பதே எதிர்காலத்துக்கு நல்லது. இல்லையேல் அபத்தம்தான்!

- என்.மகேஷ், திருச்சி

'பகுத்தறிவுக்கு எட்டாத பத்து' ஆசிரியர் பக்கத்தை பகுத்தறிவு மேதைகள் கவனிக்க வேண்டும்.

- ஆர்.சிவராமன், வாலாஜா

## ஹோம்லி அண்ட் லவ்லி!





# கல்கி

## தீபாவளி மலர் 07

ஒவ்வொரு
பக்கமும்
பொக்கிஷம்;
படிக்கப் படிக்க
பரவசம்!

**சித்திர மடல்களாக:**

- திருவாசகச் சிறப்பு
- கீர்த்தனைகளில் காதல்
- வருது வருது 2020!
- இரணியூர் அரண்மனை
- கவிதைக் களஞ்சியம்
- ஸ்ரீகூர்மம் சிற்பங்கள்

**புகைப்பட மடல்களாக:**

- கேரளத்து வர்க்கலா
- குஜராத் கிணறுகள்
- அசர வைக்கும் அக்ஷர்தாம்
- ஜெர்மனியில் ஸ்ரீஹரி
- ஆரவாரமின்றி உழவாரம்!

**பங்கேற்பு:**

கோபுலு, எஸ்.ராஜம், நடனம், தனுஷ, வேதா, மாருதி, பிள்ளை, சேகர், யோகா, ஸ்ரீஹரி, பொள்ளாச்சி சுந்தரம், அமிர்தம்

விலை ரூ.100. கூரியர் செலவாக ரூ.30 சேர்த்து எம்.ஓ. அல்லது டி.டி. அனுப்பவும். உள்ளூர் ஏஜெண்டிடமும் முன்பதிவு செய்து கொள்ளலாம்.

